ஓம
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 | ஆங்கீரஸஸு பங்குனிமீ கஉ 1933ஸு மார்ச்சுமீ 14உ | பகுதி 9

## கடவுள் வணக்கம்.

திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்றோடி யாடிவருவீர்
செம்பொன்மய மேருவொடு குணமேரு வென்னவே
திகழ் துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதா னென்னநிற் பீர்கையில்
உழுந்தமிழும் ஆசமனமா
ஓரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ரன்
உலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா எடுத்துவிளை யாடுவீர்
ககனவட்டத்தை யெல்லாம்
கடுகிடை யிருத்தியே அஷ்டகுல வெற்பையும்
காட்டுவீர் மேலு மேலும்
மிக்கசித் திகளெல்லாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. (1)

புகழும் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையும் அன்பும் அளித்தவே
சுகவிலாசத் துணைப்பொருள் தோற்றமாம்
ககனமேனியைக் கண்டன கண்களே. (2)

தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம் விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தென்னாளோ. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் எல்லாம் வல்ல சித்தர் கணத்தை நோக்கித் தமக்குத் தரிசனம் தரும் சித்தியை ஏன் செய்யவில்லை என்று வினவுகின்றார்.

(இ-ள்) வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாகப் பாவித்தமையால் சிறந்த நன்னிலையை அடைந்த ஞானச் சித்தர் கூட்டமே! திசைகளிலும் திசைகளின் முடிவுகளிலும் மனோவேகம் போல் விரைந்து சென்று ஓடியும் விளையாடியும் வருவீர்கள். செம்பொன் மயமான மகமேரு மலையோடு நற்குணமாகிய மேருமலைபோல் விளங்குகின்ற துருவ மண்டலத்தின் அளவும் போய் வேகம் மிகுந்த சக்ராயுதத்தை யேந்திய திரிவிக்கிரமன்போல நிலைத்திருப்பீர். ஏழு கடல்களையும் உழுந்தின் அளவாகச் செய்து ஆசமன நீராகக் குடிக்க வல்லீர்கள். இந்திரலோகத்தையும் அதிலுள்ள ஐராவதம் என்னும் யானையையும் கைக்கு இலேசான பந்துபோல் எடுத்து விளையாட்டுச் செய்வீர்கள். ஆகாய மண்டலங்களை யெல்லாம் கடுகைத் தொளைத்து அதில் புகட்டி அஷ்டகுல கிரிகளையும் அதில் காட்டவல்லீர்கள். மேன்மேலும் மிகுந்த சித்திகளை யெல்லாம் செய்து காட்டவல்ல நீங்கள், உங்கள் அடிமையாகிய எனக்கு எதிரில் பலருமறிய வரா நின்ற சித்தியை யுடையீர் அல்லீரோ? என்க.

தாயுமான சுவாமிகளின் குரு மௌனகுருமூர்த்திகள் திருமூலர் மரபினராதலாலும், திருமூல தேவர் அணிமாதி சித்திகள் கைவந்தவராதலாலும் இங்குச் சித்தர் கணத்தினைத் துதிப்பாராயினர். எவ்வகைப்பட்ட அரிய செயல்களையும் எளிதாக முடிக்கவல்லார் எழுந்தருளி வந்து அருள்புரிய வேண்டும் என்பது கருத்து. குணமேரு என்பதனைக் "குணமென்னும் குன்றேறி நின்றார்" என்னும் திருக்குறளால் காண்க. துருவம் என்பது அசையா நிலை என்க. துருவ மண்டலமாவது—ஐம்பெரும் பூதங்களும் அன்ன மயத்திற் பொருந்தும். அந்த அன்னமயமும் மழையிலுண்டாம். அம்மழைக்குக் காரணமாகிய சூரியன் முதலாகிய கிரகங்களும் நக்ஷத்திரங்களும் வாயுவினாற் பிணிக்கப்பட்டு நீங்காமற் சுழன்று கொண்டிருக்குமாறு செய்யும் மேரு மலையினுச்சியிலுள்ள ஒரு சோதிச் சக்கரம்.

2. இதனால் ககன மேனியைக் கண்ட கண்கள் பெற்றபேற்றினைக் கூறுகிறார்.

(இ-ள்) இன்பத்தை விளக்கின்ற லீலையினையுடைய உயிர்த்துணைப் பொருளாகிய முதல்வனுடைய சேவைக்குரிய, செவ்வானம் போன்ற திருமேனியைக் கண்டனவாகிய நேத்திரங்கள் கீர்த்தியையும், கல்வியையும், அறிவையும், பொய்மை தீர்ந்த மனத்தையும், சத்தியத்தையும், அன்பினையும் கொடுத்தன என்க.

அந்திவானத்து நிறத்தினையுடைய சகளத் திருமேனி வாய்ந்த முதல்வனைக் கண்ணாரத் தரிசித்தவர்கட்குப் புகழ் முதலிய யாவும் உண்டாமென்பதாம். ஆன்மா இவ்வுலகத்தில் அனுபவிக்கும் போகங்கள் பலவேனும் அவற்றுள் இன்றியமையா தநுபவிக்க வேண்டுவன புகழ், கல்வி, போதம், பொய் தீர்ந்த அகம், வாய்மை, அன்பு என்றனர்.

3. (இ-ள்) வீண் தர்க்கம்பேசிப் பாழாகிற சமய சூதர்க்கங்களை ஒழிந்து நிற்போர் கண்ட மார்க்கத்தின் நேர்மையை யாம் அடைவது எந்நாளோ என்க.




## அநாதைப் பெண்கள் சரணாலயம்.



சென்னைமாநகரில் "உஷார் சங்கம்" என்னும் பேரால் ஒரு சங்கம் ஏழாண்டுகளாக இருந்து வருவதையும், அச்சங்கத்தில் சென்னை பிஷப், ஸர். சிவஸ்வாமி ஐயர், டாக்டர் முத்துலக்ஷ்மி அம்மையார் போன்ற அறிஞர்களாகிய பிரபலஸ்தர்கள் முக்கிய பங்கெடுத்துக்கொண்டு தொண்டாற்றி வருவதையும் நேயர்கள் அறிந்திருப்பார்கள் என்று நம்புகின்றோம். இச்சங்கத்தாரின் இடையறாத உழைப்பின் பயனாக ஏற்பட்டது விபசாரத்தடைச் சட்டம். இந்தச் சட்டம் முதலில் சென்னை நகர எல்லைக்குள் மட்டும் அமலில் இருக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. இது இங்கே ஓரளவு பயன் அளித்து வந்ததைக்கண்ட அரசாங்கத்தார் இப்பொழுது இதை மதுரையிலும் ஸ்ரீரங்கத்திலுங்கூட நடைமுறையில் இருக்குமாறு செய்திருக்கின்றனர். சென்னை நகரில் சில மாதங்களில் சுமார் 120-க்கு மேற்பட்ட விபசாரக்குச்சுகள் காலி செய்யப்பட்டிருக்கின்றன. இப்பொழுது சென்னை அரசாங்கம் இயற்றி ஷை இடங்களில் அமலுக்குக் கொண்டுவந்திருக்கும் விபசாரத்தடைச் சட்டத்தால் விபசாரமே அடியோடு ஒழிந்துவிடும் என்று நாம் நம்பவில்லை. விபசாரத் தீமையை மக்கள் சமூகத்தினின்றும் முற்றிலும் ஒழித்து விடுவது சாத்தியமா இல்லையா என்பது வேறு விஷயம். ஒன்று மறியாத ஏழை இளம்பெண்கள் விபசாரக் குச்சுக்காரர்களிடம் அகப்பட்டுக் கொண்டு தத்தளிப்பதையும், நடுத்தெருக்களில், பட்டப்பகலில், விபசாரிகளால் நேரும் விபரீதத் தொல்லைகளையும், வெறுக்கத்தக்க அருவருப்புக் காட்சிகளையும், பயங்கரமான ஒட்டு நோய்கள் பரவுவதையும ஒருவாறு ஒழிக்கும் அளவுக்கேனும் இச்சட்டம் பயன்படாதா என்ற ஆசைகொண்டே நாம் இதை ஆதரித்து வருகின்றோம்.

விபசாரம் ஐம்பெரும் பாவங்களில் ஒன்றாக நமது நாட்டில் கரு

தப்படுகிறது. விபசாரத் தீமையை வருணிக்காத அறநூலே நமது நாட்டில் இல்லை என்று கூறலாம். ஒழுக்கமே உயிராகப் போற்றும் இப்புண்ணிய பூமியில்—ஆன்மார்த்த அறிவை அடிப்படையாகக் கொண்ட சமூக வாழ்க்கையானது தலைசிறந்து விளங்கிய நம் அரும் பெரு நாட்டில் பண்டைக்காலந் தொட்டே விபசாரத்தீமை இருந்து வந்ததாகத் தெரிகின்றது. இடைக்காலத்தில் அதற்குச் சமயசாஸ்திர அங்கீகாரமும் ஒருவகையில் கிடைத்து விட்டது என்று துணிந்து கூற லாம். அதாவது இக்காலத்தில் பெரும்பான்மையான தேவதாசிகள் என்போரின் வாழ்க்கை நிலையையும், இவர்கள் தெய்விக ஆகமசாஸ்தி ரங்களின்படி நிர்மாணிக்கப்பட்டுள்ள கோயிலகளில் மானியம் பெற்று வருவதையும, தேவதாசி முறையை ஒழிக்கவேண்டும் என்று யாரா வது கூறினால் அது சாஸ்திர விரோதம், தெய்வ விரோதம் என்று ஒரு சாரார் கூச்சல போடுவதையும் நோக்கியே நாம் விபசாரத்திற் குச் சமய சாஸ்திர அங்கீகாரம் கிடைத்துவிட்டது என்று குறிப்பிடு கின்றோம். நாம் இங்ஙனம் குறிப்பிடுவதால் ஒரு சில தேவதாசிகள் என்பவர்கட்கும்—சாஸ்திரிகள் என்பவர்கட்கும் நம்மீது கோபம் எழலாம். ஆனால் அத்தகையோர் தேவதாசிகள் சமூகத்தின் தற் கால இழிநிலையைச் சற்றே கூர்ந்து சிந்திப்பார்களாக. தேவதாசிகள் என்போர் பண்டைக்காலத்தில் எந்த நன்னோக்கதுடன் ஆலயங்களில் ஆதரித்து வைக்கப்பட்டனரோ அந்நோக்கத்தில் ஆயிரத்தில் ஒரு மடங்கேனும் இக்காலத்தில் நடைமுறையிலிருந்து வருகிறதா என்று அவர்களைக் கேடகின்றோம். தேவதாசி—தேவடியாள் என்றால் இக்காலத்தில் அப்பெயர்கட்குரிய புனிதத் தன்மை மறைந்துவிட் டது. விபசாரி என்ற பொருளிலேயே அச் சொற்கள் வழங்கப்படு கின்றன. அச்சமூகத்தைச் சேர்ந்த பெரும்பான்மையோரின் நிலைமை அவ்விதமே இருப்பதையும் யாரும் மறுப்பதற்கில்லை. தேவதாசி முறைக்கு எவ்வளவு சாஸ்திரங்களை ஆதாரங்காட்டினாலும் அதைக் கட்டோடு ஒழித்துவிடவேண்டும் என்பதே நமது உறுதியான அபிப் பிராயமாகும். "தேவதாசிகள் முற்காலத்தில் பிரமசாரிணிகளாய்த் தெய்வத்திருப்பணி செய்து வந்தார்கள்; தூய புலனடக்கமுடைய வாழ்க்கையை நடத்திவந்தார்கள்; காலவேறுபாட்டால் இக்காலத் தில் கெட்டுப் போய்விட்டார்கள்" என்று ஒரு சிலர் வாதிக்க முன் வருகின்றனர். உண்மையில், பண்டைக்காலத்தில், தேவதாசிகள் என்போர் பிரமசாரிணிகளாய்—புலனடக்கமுடைய தெய்வத்திருப் பணியாளர்களாய் விளங்கியிருந்தால் அவர்களுடைய பரம்பரை வாழையடி வாழையெனத் தழைத்தோங்கி வருவதற்கு என்ன கார ணம் என்று எமக்கு விளங்கவில்லை. இப்பொழுது எடுத்துக்கொண்ட விஷயம் தேவதாசிகளைப்பற்றிய ஆராய்ச்சி அல்லவாதலால் அதைப் பற்றி இங்கே நாம் அதிகமாய் விரிக்க விரும்பவில்லை. விபசாரத் தீமையின் வலிமையையும் அது நமது சமூகததில எந்த ரூபத்தில்

ஆதரவு பெற்று வருகிறது என்பதையும் ஒரு சிறிது எடுத்துக்காட்டவே அவ் விஷயத்லதை இங்கே குறிப்பிடடோம்.

மக்கள் சமூகத்தினின்றும் விபசாரக் கொடுமையை முற்றிலும் ஒழித்துவிட வேண்டும என்பதற்குச் சாஸ்திர ஆதாரங்காட்டி விரிவுரை நிகழ்த்தவேண்டியது அநாவசியம். ஆனல் அதை எப்படி ஒழிப்பது என்பதுதான் கேள்வி. மக்கள் பாவகாரியங்களைச் செய்யாமல் ஒழுக்க முடையவர்களாய் வாழவேண்டும் என்பது தருமசாஸ்திரங்களின் முழக்கம். அவ்வொழுக்க நெறிகளை நாட்டின்கண பரப்ப வேண்டிய பொறுப்புச் சிறப்பாகச் சமயத் தலைவர்களைச் சார்ந்து நிற்கிறது. இக்காலத்தில் நமது சமயத் தலைவர்கள்—மடாதிபதிகள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைச் சற்றே கவனிக்குமாறு நேயர்களை வேண்டுகின்றோம். நாட்டின்கண் சமய உணர்வைப் பெருக்கிச் சன்மார்க்க நெறிகளைக் காட்டக் கடமைப்பட்ட சமயத் தலைவர்கள் புன்னெறிக் களஞ்சியங்களாய் வீண்பொழுது போக்கிக் கொண்டிருக்கின்றனர். ஒழுக்கத்தை ஓம்ப விடப்பட்ட மானியப் பொருள்கள் கூடா ஒழுக்கத்திற்கு ஆக்கம் அளிக்கும் முறையில் துர்விநியோகம் செய்யப்படுகின்றன. ஆகையினலேயே, உலகத்திற்கே உயரிய ஒழுக்கத்தையும், ஆன்மார்த்த நாகரிகத்தையும் புகட்டும் பெருமை வாய்ந்த நமது நாடு, கண்டார் கைகொட்டிச் சிரிக்கும் இழிநிலையில் தத்தளித்துக் கொண்டிருக்கிறது. ஆண்டு ஒன்றுக்குப் பல லக்ஷக் கணக்கான வருவாயுள்ள ஆலயங்களும, சைவ—வைணவ—அத்வைத மடங்களும் நமது நாட்டில் இருக்கின்றனவே—இவற்றின் பொருள்களெல்லாம எந்த வழியிற் போகின்றன? தாசி வேசிகளின் ஆடல பாடல்கட்கும், வாண வேடிக்கைகட்கும், கோர்ட்டு விவகாரங்கட்கும் தேநீர் விருந்துகட்கும், மோட்டார்—பல்லக்குச் சவாரிகட்கும், அதிகார வர்க்கத்தினர் உபசாரங்கட்கும், களியாடல்கட்குமே எல்லாப் பொருள்களும் கொள்ளைபோகின்றன. இவற்றிற்காகவா நமது முன்னோர்கள் இவ்வளவு தரும ஸ்தாபனங்களையும் மானியங்களையும ஏற்பாடு செய்தனர்? நாம் பிறசமயத்தாரைப் புறச் சமயத்தார் என்று அவமதிப்பாகக் கருதுகின்றோம. (நமது உண்மைச்சமயம் அங்ஙனம் கருதவில்லை.) ஆனல் ஒரு சில 'புறச் சமயத்தார்' மக்கள் சமூகத்திற்குச் செய்துவரும் அருந்தொண்டு பெரிதும் போற்றத்தக்கதாகும். கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் நமது நாட்டில் யாரும் வியககத்தக்க வண்ணம் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றி வருகிறார்கள். தங்கள் சமயத்தைப் பரப்ப அவர்கள் சமய நூல்களை வெளியிடும் முறையும, பள்ளிக்கூடங்கள், வைத்தியசாலைகள் முதலியனவைகளை நிருமாணிப்பதில் அவர்கள் காட்டிவரும் சிரத்தையும பொன்னேபோற் போற்றத் தக்கவை அன்றோ? இவர்கள் காட்டும் முயற்சியில கோடியில் ஒரு மடங்கேனும் நமது சமயததலைவர்கள் காட்டுகிறார்களா என்று கேட்கின்றோம். இவர்கள் சமமா

மூலைகளில் உட்கார்ந்து கொண்டு "கலி முற்றிப்போச்சு. பஞ்சமா பாதகம் மிஞ்சிப் போச்சு. அக்கிரமங்கள் அதிகமாச்சு" என்று சொல்லிக்கொண்டிருப்பது நகைப்பிற் கிடமான விஷயமாகும். நிற்க,

நமது நாட்டில் முதன் முதலாக விபசாரத் தடைச்சட்டம் இயற்றி வைத்த பெருமை சென்னை மாகாணத்திற்கே உரிமை யாகும். வடநாட்டில் பெஷாவர் முதலிய இடங்களில் விபசாரிகளின் விடுதிகளில் சத்தியாக்கிரகம் நடைபெற்ற செய்தி முன்பு பத்திரிகைக ளில் வெளிவந்தது. ஆனால் இத்தகைய தடைச்சட்டம் ஏற்பட்டதா கத் தெரியவில்லை. இம்மாகாணத்தில் இயற்றி வைக்கப்பட்டுள்ள விப சாரத் தடைச்சட்டம் தக்க பலன் அளிக்கவேண்டுமானால் சிறப்பாக அரசாங்கத்தாரும் சமயத்தலைவர்களும்—பொதுவாக நாட்டுமக்களும் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயம் ஒன்றுண்டு. வெறும் சட்டத் தால் மட்டும் விபசாரக்குச்சுகளை ஒழித்துவிட முடியாது. விபசார விடுதிகளில் ஒன்று மறியாத ஏழை இளம்பெண்கள் பலர் அகப்பட் டுக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் முதலில் விபசார விடுதிக் காரர்களால் ஏமாற்றப்பட்டதற்கும், பிறகு அவ்விடுதிகளில் சொல்ல முடியாத அல்லல்களைச் சகித்துக் கொண்டிருப்பதற்கும் முக்கிய காரணம் வயிற்றுப் பிழைப்பிற்கு வழிகாணும் அறிவின்மையே யாகும். இப்பொழுது நடைமுறையிலுள்ள சட்டப்படி விபசார விடுதிகளினின்றும் மீட்கப்படும் இளம்பெண்களின் பிற்கால கதி என்ன என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இங் ஙனம் மீட்கப்படும் பெண்கட்குக் கல்வியறிவு தந்து வயிற்றுப் பிழைப்புக்கு ஏதேனும் வழி காட்டாவிட்டால் மீண்டும் அவர்கள் கூடா வொழுக்கங்களில் நிர்ப்பந்தமாய்த் தலையிட வேண்டியவர் களேயாவார்கள் என்பதில் ஐயமும் உண்டோ? ஆகையால் விப சார விடுதிகளினின்றும் மீட்கப்படும்பெண்கட்கு ஒரு "சரணாலயம்" இருக்கவேண்டியது இன்றியமையாத விஷயம் என்று பல நாட்க ளாக வற்புறுத்தப்பட்டு வருகிறது. அரசாங்கத்தார் இவ்விஷயத்தைச் சிறிதேனும் லக்ஷியம் செய்யவில்லை. சென்ற மாதம் உஷார் சங் கத்தின் ஆண்டுக் கூட்டத்தில் மேன்மைமிக்க சென்னை கவர்னர் பேசிய பொழுது மீட்சி விடுதிக்கு அரசாங்கத்தார் பொருளுதவி செய்யமாட்டார்கள் என்றும், அப்பொறுப்பைப் பொதுஜனங் களே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் தெரிவித்தார். ஏன் அர சாங்கத்தார் இதை இவ்வளவு தூரம் அலக்ஷியம் செய்கிறார்கள் என்று நமக்கு விளங்கவில்லை. குடிமக்களின் நலத்தைப் பேணுவ தாகக் கூறிக்கொண்டுவரும் அரசாங்கத்தார் சமூகத்தைப் பாழ்படுத் தும் ஒரு பெருங் கொடுமையை விலக்கும் விஷயத்தில் உதவிசெய்ய மறுப்பது பெரிதும் வருந்தத் தக்கதாகும்!

அரசாங்கத்தார் பொருளுதவி செய்யவில்லை என்பதனால் பொது மக்கள் ஏழை இளம் பெண்களின் விஷயத்தில் அசிரத்தை காட்டி

விடக்கூடாது என்றும் எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். விபசார விடுதிகளினின்றும் அநாதைப் பெண்களை மீட்டுக் காப்பது நமது சமூக நல்லொழுக்கத்தைக் காப்பதாகும் என்னும் உண்மையை ஒவ்வொருவரும் நன்கு கவனிக்கவேண்டும். முக்கியமாய் நமது சமயத் தலைவர்கள் இதில் கருத்தைச் செலுத்தவேண்டும் என்று விரும்புகின்றோம். நமது முன்னோர்கள் சமயத்தையும் நல்லொழுக்கத்தையும் வளர்க்கும்பொருட்டு ஏற்படுத்திய தரும ஸ்தாபன மானியங்களைத் தேவதாசி முறைபோன்ற தீய காரியங்களில் துர்விநியோகம் செய்துவரும் தர்மஸ்தாபன பரிபாலகர்கள், தாங்கள் இதுகாறும் செய்துவிட்ட பாவங்கட்குப் பரிகாரமாக மீட்சி விடுதிகட்குப் பொருளுதவி செய்யவேண்டும் என்று அவர்களைப் பெரிதும் வற்புறுத்துகின்றோம். இவ்வுண்மையான புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபட முன்வாராத தரும பரிபாலகர்களை நல்வழிப் படுத்தும் பொறுப்புப் பொதுமக்களைச் சார்ந்திருக்கிறது என்பதையும் இச்சமயத்தில் நினைவூட்டுகின்றோம். சமயத் தலைவர்களும் பொது மக்களும் முனைந்து நின்று வற்புறுத்தினால் அரசாங்கத்தாரும் தங்கள் கடமையை உணர்ந்து நடப்பார்கள்—நடந்து தீரவேண்டும் என்பது எமது நம்பிக்கையாகும். சமயங்கட்குத் தாயகமாயும், கல்வி, அறிவு, ஒழுக்கங்களிற் சிறந்த சான்றோர்கள் பலர் தோன்றுவதற்குக் காரணமாயும் விளங்கும் நமது நாட்டில் இன்னும் ஆலயங்களில் தேவ தாசி முறையை அனுஷ்டித்து விபசாரத்திற்கு ஆக்கமளித்து வருவதும், விபசார விதிகளில் கட்டுண்டு கிடக்கும் ஏழை இளம்பெண்களைக் காக்கும் விஷயத்தில் தயக்கங் காட்டுவதும் மிகுந்த மானக்கேடான செய்திகளாகும். இம்மானக்கேட்டைப் போக்கச் சென்னை உஷார் சங்கத்தார் முயன்றுவருகின்றனர். ஒரு சில மாதங்களில் 120-க்கு மேற்பட்ட விபசாரக் குச்சுகளை ஒழித்திருப்பதும், அதனால் இருபத்தையாயிரம் அநாதை ஏழை இளம் பெண்களை விபசாரக்குச்சு ராக்ஷஸர்களிடமிருந்து காப்பாற்றியதும் இச்சங்கத்தார் செய்திருக்கும் தொண்டிற்குரிய நற்சான்றுகளாகும் என்று கருதுகின்றோம். இம்மாகாணத்தில் சென்ற ஆண்டில் கூடாவொழுக்க நோயாளிகளில் 262470 பேருக்கு வைத்தியசாலைகளில் சிகிச்சை அளிக்கப்பட்டதாக சர்ஜன் ஜனரல் தெரிவித்திருந்தார். சிகிச்சைக்குப் பகிரங்கமாய்வந்தவர்களின் தொகையே இவ்வளவு. வைத்தியசாலைகட்கு வரத்துணிவின்றி வீடுகளிலேயே அவஸ்தைப்பட்டுக்கொண்டிருப்பவர்கள் லக்ஷக்கணக்கில் இருப்பார்களென்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆகையால் விபசார விடுதிகளினின்றும் மீட்கப்படும் இளம் பெண்கட்குச் சரணாலயம் ஏற்படுத்தும் விஷயத்தில் நாட்டுமக்கள் எல்லோரும் உஷார் சங்கத்தாருக்கு ஊக்கம் அளிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம். சிறப்பாகப் பொதுநலத் தொண்டில் சிரத்தையுள்ள பெண்மணிகள் இத்துறையில் கருத்தைச் செலுத்தல் நலம். ஓம் தத் ஸத்.

# மறுப்பின்மேல் ஓர் குறிப்பு.

——:(o):——

தோ. மு. பாஸ்கரத் தொண்டைமான். பீ. ஏ.

சென்ற தைத் திங்கள் 'ஆனந்தன்' வெளியீட்டில் திரு. கோபால திருமலை, பி. ஏ., என்னும் அன்பர் எழுதிய புனைந்துரையும் மறுப்பும் என்னும் கட்டுரையை அன்பர்கள் மறந்திரார் என்று நினைக்கின்றேன். அன்பர் கூறிய புனைந்துரை புனைதற்குத் தமியேன் தகுதியுடையேன் என்று நினைக்கின்றேனில்லை. என்னையும் எனது கட்டுரைகளையும் வானளாவப் புகழ்ந்த அன்பர், உண்மை காணும் விளைவால், யான் எழுதிய "கம்பர் கவியின் செந்தமிழின்பம்" என்னும் கட்டுரையில், தாம் கண்ட இரண்டு முரண்பாடுகளை எடுத்துக் கூறினார்கள். 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது' அறிவுடைமையேயன்றோ! ஆனால் அன்பர் கண்ட முரண்பாடுகள், அவர்கள் கருதுகின்றபடி, முரண்பாடுகள்தாமா அன்று என்பதை அறிஞர் ஆராய்ச்சிக்கே விடுவதுதான் எனது கருத்து எனினும், நான் கொண்ட கருத்துக்களைத் தெள்ளிதில் விளக்காத ஒரு குற்றத்தால், அன்பர் அவைகளை முரண்பாடுகள் என்று கருதியிருத்தல் கூடுமாகலின், அக்குறையை நிறைசெய்யவே இக்குறிப்புரை எழுத முன்வந்தேன்.

அன்பர், "உலக இயல்பு, உண்மை நிலை, இயற்கை முறை இவைகளினின்றும் வழுவாது காவியம் எழுதப்போந்தவர் கவியரசர் ஆகையால், களவியலின் ஓர் அங்கத்தைச் சேர்த்துக்கொண்டனரே யன்றி, முதனூலின் ஆசுர முறையை விடுத்தவரல்லர்" என்று கூறுகின்றார். இக்கூற்று எனது கட்டுரையிடை யெழுந்ததொரு கருத்துக்கு முரண்படுவ தெங்ஙனம்? வான்மீகர் சீதையின் மணவினையை ஆசுர முறையில் முடித்ததை, தமிழர் நாகரிக முதலியவற்றிற்கு ஒவ்வாதெனத் தள்ளி, கவியரசர் தமிழ் மக்களுக்குரிய, களவியல் முறையில் காதையை நடத்தினர் என்று யான் கூறியதாக அன்பர் எழுதியுள்ளார்கள். யான் எவ்விடத்தும் கவியரசர் ஆசுர முறையை அறவேவிடுத்த அருந்தகை என்று கூறினவனல்லன் என்பதை அன்பருக்கு எடுத்துக் காட்டும் அவா மிகவுடையேன். பின்னை, யான் வற்புறுத்த விரும்பியது என்னையெனின் ஆசுர முறை ஆரிய மக்களின் முறையென்றும் அம்முறை யறியாத் தமிழரிடையே காவியத்தை நடத்தக் கருதிய தலைமகனை கம்பர், தமிழ் மக்கள் பொன்னேபோல் போற்றும் களவியல் ஒழுக்கத்தை—முதனூலில் காண்பதற்கரியதோர் சீரிய ஒழுக்கத்தைச் செம்மையாகக் காட்ட விரும்பி வில்லிறுப்பதற்கு முன்னமேயே, தலைவனையும் தலைவியையும் கண்ணளவிலும் கருத்தளவிலும் ஒன்று கூட்டி, இருவர் தம் உள்ளமும் உணர்வும் ஒன்றுபட வைத்தருளுகின்றார் என்பதேயாகும்.

இன்னும் அன்பர், "எள்ளரிய தவத்தோனும் வள்ளலும் இளவலும் மிதிலை நகரின் பல வீதிகளையும் கடந்து ராஜக் கிருகத்தை அணுகினர்" என்று தொ

டங்கி, "இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர்" என்று முடித்து, இவ்வளவும் களவியலின் ஓர் சிறு பகுதியைச் சார்ந்தது என்று கூறுகின்றார்கள். பிணி, மூப்பு, இவையின்றி எப்பொழுதும் ஒரு தன்மையராய், உருவும் திருவும், குலமும் குணமும், பருவமும் அன்பும் ஒத்தவராய தலைமகனான இராமனும், தலைமகளான சீதையும், பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இன்றி, தாமே எதிர்ப்பட்டு கண்ணால் கண்டு, கருத்தால் ஒருமித்து, உணர்வால் ஒன்றுபட்ட, இம்முறை, களவியலின் ஒரு பகுதியென்றால், களவியலின் பெரும் பகுதி யாதென அறிய அவாவுகின்றோம். தலைமகனுக்கும் தலைமகளுக்கும் ஊடே, பாங்கனும் தோழியும் இடைவருவதும், ஊரில் அலர் எழுவதும் தலைவன் மடலூர்தலும் களவியலின் பெரும் பகுதியென்று கருதுவோர் அவ்வொழுக்கத்தின் உண்மை உணர்ந்தாரல்லர் என்பது வெளிப்படை.

மற்றும் "சீதையைப் பெறுவதற்குப் பணயமாக வைக்கப்பெற்ற அரனது வில்லை ஐயன் குறிக் கொண்டான். அவ்வில்லை ஜானகிக்குச் சூட்டிட நீட்டும் எடவிழ்மாலை யென்ன இமைப்பொழுதில் எடுத்து ஒடித்தான். இப்பொழுதே நங்கையைப் பெறுதற்கு நம்பி உரியனாகின்றான்" என்று அன்பர் அறுதியிட் டுரைக்கின்றார். வான்மீகர் எழுதிய கவிதையைத் தழுவி, இராம கதை எழுதப்போந்த நம் தம் கவியரசர் ஸ்ரீராமன் வில்லிறுத்துச் சீதையைப் பணயமாகப் பெற்றதை அறவே யொதுக்க இயலாதவராய், அவ்வில்லிறுத்த வீரச் செயலை எடுத்துக் காட்டுகின்றாரே யொழிய வில்லொடித்த தொரு காரணத்தாலேயே, நமபியைப் பெறுதற்கு நம்பி உரியனாகின்றான் என்னும் கொள்கையை நிலை நிறுத்த நினைக்கின்றாரில்லை. இராமன் வில்லொடித்ததால் எழுந்த வீர ஒலி, கன்னிமாடத்திருந்த சீதையின் காதிலும் சென்று இடிக்கின்றது. இவ்வொலி கேட்ட சீதை வில்லொடித்த வீரன் இவன் என்று அறியமாட்டாதவளாய் மயங்கி நிற்கின்றாள். இந்த நிலையில், தோழி நீலமாலை கலைகளும், குழலும் சோர்தர ஓடிவந்து இளையகோவொடும், கோமுனியொடும் வந்ததொரு கொண்டல் வில்லிறுத்தான் என்று கூறித் தன் தலைவியின் மயக்கம் தெளிவிக்கின்றாள்.

"கோமுனியுடன் வருகொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினான் என்ற தன்மையால்
ஆமவனேகொல் என்று ஐயம் நீங்கினாள்."

என்று கவி கூறுகின்றார். இவ்வாறு ஐயம் நீங்கிய சீதை, பின்னும் அவ்வையம் தன்னை அடிக்கடி அலமறச் செய்வதறிந்து, நீலமாலை சொல்கின்ற குறிகளால் "வில்லிறுத்த வீரன் என் நிறை கவர்ந்த கள்வனே யாதல்வேண்டும்; அவனன்றி வேறொருவனாயிருப்பின் இறந்துபடுவேன்" என்று தீர்மானிக்கின்றாள்.

"சொல்லிய குறியின் அத்தோன்றலே யவன்
அல்லனேல் இறப்பன் என்று அகத்து உன்னினாள்"

என்று கவிஞர் கூறிய கட்டுரையின் கருத்து இதுவே யாகும். ஆனால், அன்பர், "ஐயப்பாடு சிறிதுமற்ற ஓர் முடிவை வலியுறுத்துவோர் அதற்குப் பெரும் பொருளைப் பணயமாக வைப்பது உலக இயல்பு என்றும், அவ்வாறு தான் ஐயம் நீங்கி, உறுதியில் நிலைத்தற்குத் தன் உயிரையே பணயமாக வைத்தாள்" என்றும் கூறுகின்றார்கள். இவ்வாறு கம்பர் தங் கவிக்கு, வலிந்து பொருள் கோள்வது கவிநலம் உணர்ந்தோர் கொள்கையாகாது என்பதை மட்டும் வலி

யுறுத்த விழைகின்றேன். தான் கண்ட ஒரு தலைவனைப் பிறிதொருத்தி சொல்லுகின்ற ஒரு தலைவனுடன் ஒப்பிட்டு, இருவரும் ஒருவரே யென்ன உறுதியாய் உணர்ந்து அவ்வுறுதிக்கே பணயமாகத் தன் உயிரையே நிறுவினாள் சீதை (கம்பர் கண்ட சீதை) என்று கூறுவது ஒரு சிறிதும் பொருத்தமற்றதாகும்.

இன்னும்,

"ஐயனை அகத்துவடிவேயல புறத்தும்,
கையவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்"

என்று கவிஞர் அருளியதற்கு, வில்லிறுத்த வீரனுக்கு நங்கையை நல்கும் பொருட்டுச் சேடியர் தன்னைக் கோலஞ்செய் காலமெல்லாம் தான் அவனிலும் வேறயதொரு முனிவன் பின் சென்ற பேரழகனையே நினைத்திருந்து, பின்னர் மண்டபத்தை யடைந்து, தன் மனச்சிறையில் மருவிய மன்னனைக் கண்டு மயக்கம் தீர்ந்தனள் என்று கொள்வது பொருத்தமற்ற தாகும் என்று கூறுகின்றார் அன்பர். இவ்வாறு யான் சொல்லாததொரு பொருளை யெல்லாம் எனது கட்டுரையில் ஏற்றி அன்பர் இடர்ப்படுவானேன்? தெருவூடே சென்ற மன்னவன் மைந்தனைக் கண்டு, அகத்தில் நிறுத்திய மங்கை பின்னர் தோழி நீலமாலை சொல்லுகின்ற குறிகளால், வில்லொடித்த வீரனும் தான் கண்டு காதலித்த தலைவனும் ஒருவனயிருத்தல் வேண்டும் என்று நினைந்தனளேனும், இருவரும் வேறு வேறுவரோ என்னும் ஐயம் முற்றிலும் தன்னைவிட்டு நீங்காததொரு காரணத்தால் அரசவையில் அமர்ந்திருந்த தலைவனை கடைக் கண்ணால் நோக்கி, தனது ஐயத்தை முடிவாய்த் தீர்த்துக் கொள்கின்றாள் என்பதே எனது கருத்து. அகத்திடை நிறுத்திய ஐயனைப் புறத்துங் கண்டு மகிழும் காரிகையின் கண்களில் காதல் நலம் கனிந்து விளங்கக் காணலாம்.

இன்னும் "சீதை தன் ஐயம் முற்றும் தேறாதவளா யிருந்திருப்பின், உலாவியலின்போது நகரமாத ரனைவரையும் வீதிகளிலிழுத்துவந்த கவிஞர் பெருமான், பிராட்டியையும் கன்னிமாடத்து நிலாமுற்றத்துக்கு இழுத்துக் கொணர்ந்து தலைவியின் ஐயத்தை ஒழித்திருப்பாரன்றோ?" என்று வினவுகின்றார். இவ்வையம், நம் அன்பருக்கு எவ்வாறெழுந்ததோ அறியேன். சீதையும் இராமனும் முதன் முதலில் ஒருவரை யொருவர் கண்டு காதலிக்கின்றனர். பின்னர் சீதையின் காதல் வலியால் ஏற்பட்டதொரு உரத்தால், இராமன் வில்லொடிக்கின்றான். நம்பிக்கு நங்கையை மணமுடிக்கப் பெற்றோரும் மற்றோரும் விரைகின்றனர். இந்த நிலையில், இராமன் மிதிலை நகரின் வீதி வழியே உலாப் புறப்படுகின்றான். அவ்வாறு உலாப் புறப்படுவதை நகரமாந்தர் அனைவரும் கண்டு களிக்கின்றார்கள். நகரத்திலுள்ள எல்லோரும் கண்டு களித்ததொரு காட்சியை, ஒரேயொருத்தி மட்டும் காணக் கூடாதவளாயிருக்கின்றாள். அவள்தான் சீதை. தான் மணமுடிக்கப் போகும் நாயகன் உலாப்போவதைக் கண்டுகளிக்க முடியாது அவளைத் தடைப்படுத்துவன யாவை யெனின், அவை மடவார்க்குரிய அச்சம், மடம், நாணம் என்பவையேயாம். நம்பியைக் காண நங்கை விழைந்தனளேனும், நாணம் ஓர் புறம் ஈர்த்தது, தோழியர் "இவ்வளவு அவசரமா இவளுக்கு" என்று பழிப்பரே என்ற எண்ணமும் இடை நின்று தடுத்தது. இந்த நிலையில் உலாப் புறப்பட்ட உத்தமனைக் கண்டு காணச் சீதைக்கு இயலாததாயிற்று. தான் முதன் முதலில் கன்னிமாடத்து நின்று கண்ட தலைமகனை அதற்கடுத்தபடியாக அரசவையில்தான் காணப்பெறுகின்றாள். அந்த நிலையில், தன்னுள்ளத்தில்

வருவதும போவதுமாய், ஊசலாடிக்கொண்டிருந்த ஐயத்தை நீக்க அம் மங்கை விரைகின்ருள். தான் கண்டு காதலித்த தலைவனை தன் கைவளை திருத்துபு கடைக்கண்ணின் உணர்கின்ருள். என்னே புலவர் பேரறிவு. அவர், "உலக இயல்பு, உண்மை நிலை, இயற்கை முறை" இவைகளினின் றும் வழுவாத பேரறிஞர் என்பதற்கு, இதைவிட வேறு சான்று தேடித் திரி தலும் வேண்டுமோ?

இன்னும் கம்பரது கருத்தில், வில்லொடித்ததொரு காரணத்தால் மட் டுமே சீதை ராமனுக்குரியவள் என்று கொள்வதற்கு ஒரு சிறிதும் இடமில்லை என்பதற்கு ஒரேயொரு சான்று மட்டும் கூறி நிறுத்துகிறேன்.

"நச்சுடை வடிக்கண்மலர் நங்கை இவளென்ருல்
இச்சிலை கிடக்க மலையேழையும் இறுநே"

என்று கவிஞர் கூறும்பொழுது சீதையைக் கண்டு, அவளது அளப்பரிய அழ கெனும் அமுதை யமிதமாயுண்டு, உடலுரம்பெற்று நின்ற நிலையில், இராமன் இவ்வில்லொன்றையா ஒடிப்பான், இன்னும் ஏழு மலைகளையும் பிளந்தெறியும் ஆற்றல் படைத்தவனுகானே என்று கூறும் முறை கற்ருர் கருத்தைக் கவர்வ தாகும்.

இவை நிற்க, அன்பர், கடைசியாக, "ஆசுரமண முறையென்னும் சித் திரத்திற்குக் களவியற்றிலகமிட்டு எழிலுறச் செய்தது கவிச் சக்கிரவர்த்தியின் தனிப் பெருமையாகும்" என்று கூறியதை ஒரு சிறிதே மாற்றி, அசுரமண முறையை வேண்டா வெறுப்பாய் ஏற்றுக் கவிதையில் அமைத்துக் கவியரசர், அச்சித்திரத்தைக் களவியற் சித்திரமாக்கிக் கற்ருேரும் மற்ருேரும் கண்டு காமுறும் வண்ணம் கவிதை யியற்றினர் என்று கூற விருப்புடையேன்.

இனி, அன்பர் கண்ட இரண்டாவது முரண்பாடாவது, பிறர் நெஞ்சு புகுந்தவர் கற்பில் வழுவியவர் என்றுகொள்ள இயலாதென்பதாகும். அன்பர் "பண்டைத் தமிழர், நிறையுடை மாதரைத் தெய்வந்தொழும் கற்பினர் என் றும், கணவனை யல்லது பிறிது தெய்வம் பேணுக் கற்பினர் என்றும் இரு பாகுபாடு செய்தனர் என்றும், இதிற் பின்னவரே பிறர் நெஞ்சு சுடூஉம் பெற் றியாராகி, அதனுல் பிறர் நெஞ்சு புகாது மழை வளந்தரும் மாண்புடையவரா வார்" என்றும் கூறுவாராயினர். உண்மையே! எனினும் யான் எனது கட் டுரையில் காட்ட விரும்பியது தமிழர், கற்பொழுக்கத்தில் கண்ட தீவிரக் கொள்கையையேயாகும். தங்கள் நாயகரில் தெய்வம் தவம் பிறிதில்லை என் றெண்ணும் மங்கைமார் தூயசிந்தையைத் தெள்ளிதில் விளக்கவே, கற்பெனப் படுவது பிறர் நெஞ்சு புகுதாமை என்று கூறலுற்றேன். பிறர் நெஞ்சு புகுந்த தொரு பெற்றியால் ஏற்பட்டதொரு மாசு நீக்கவே, கவிஞர், அரக்கர்கோன் அன்னையைக் கவர்ந்து சென்ற ஒரு முறையைத் திரித்துக் கூறுவாராயினர். யான் கூறியபடி ஆங்கு ஒன்றும் பொதிந்து வைக்கப்பட்டிலது என்று கூறு வார் கூற்று நமக்கு வியப்பையே யளிக்கின்றது. கம்பர் திருத்தி விரித்த கதை ஆனந்த ராமாயணத்துடன் ஒத்துள்ளது என்ருல் அது எனக்கு ஆனந் தத்தையே விளைவிக்கின்றது. எக்காரணம் பற்றியும் கவியரசர் கம்பர் வான் மீகத்தினின்றும் கதையைத் திருத்தி யமைத்ததொரு பெற்றி போற்றத் தகுந்தது என்று கூறும் எனது கூற்றை மறுப்பவர் ஒருவருமிலர். நிற்க.

இனி நான் கம்பர் கவியின் செந்தமிழின்பம் என்னும் கட்டுரையில் காட்ட விரும்பியது என்னையெனின்: கவியரசர் கம்பர் தான் பிறந்து வளர்ந்து

வாழ்ந்த நாட்டின் ஒழுக்கங்களுக்கு மாறுபடாவகை, இராம கதையைப் புதுக்கியும் திருத்தியும் அமைத்தருளுகின்றார் என்பதேயாகும். இவ்வளவில் யான்கொண்ட கருத்தைத் தெள்ளிதில் விளக்க என்னால் இயன்ற அளவு பணியாற்றியுள்ளேன் என்னும் எண்ணமே என்னை ஊக்குவதாகும். எடுத்துக் கொண்ட பொருளுக்கேற்ப ஏற்ற பெற்றியை விடச் சிறிது அதிகமாகவே புனைந்து கூறியிருப்பினும் அவை முரண்பாடுகளாகா என்பதை அன்பருக்கு எடுத்துக் காட்டும் கடப்பாடு மிக்குடையேன். அன்பர் கூறிய புனைந்துரைகளுக்காகவும், அவர்கள் எனது கருத்தைத் தெள்ளிதில் விளக்கக் கொடுத்த ஒரு சந்தர்ப்பத்திற்காகவும், என் நன்றி அவர்க்கு உரியதாகுக. கம்பரது கவிதை ஆராய்ந்து உண்மைகாண அவாவுடையார் அன்பர் போன்று பலர் உளர் என்ற உணர்வே என்னை இன்னும் இது போன்ற பணியில் ஊக்கும்.

---




# அன்னமும் அன்றிலும்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

அனிச்ச மலரும் அன்னப் பறவையும் புலவர் பாடும் புகழமைந்தனவாம். மலர்களில் மிக மென்மை வாய்ந்தது "அனிச்சம்" என்றும் பறவைகளில் மிக மென்மை வாய்ந்தது "அன்னம்" என்றும் கவிகள் கருதுகின்றார்கள். நீர்வளம் நிறைந்த நாட்டில், புதுப்புனல் பெருகும் பொய்கைகளில், அன்னங்கள் அமைந்து வாழும் என்று அறிஞர் கருதுகின்றார்கள். இயற்கையோடிசைந்து வாழும் பறவைகளில் அன்னம் தலைசிறந்ததென்று கூறுதல் மிகையாகாது. தண்மை வாய்ந்த தடங்களிலும், நிழல் அமைந்த பொழில்களிலும் விரும்பி உறையும் அன்னம், கமலப்போதையும் கலப்பற்ற பாலையும் உண்டு வாழும் என்றும், மெல்லிய கமல மலர்களிலேயே உறங்குமென்றும் அப்பறவையின் இயலறிந்தோர் பகர்கின்றார்கள். கண்களைக் கவரும் அழகு வாய்ந்த கமலப் பொய்கையில் மென்மை வாய்ந்த அன்னம் துயிலும் அழகினை,

"தோயும் திரைக ளலைப்பத் தோடார் கமலப் பள்ளி
மேய வகையில் துஞ்சும் வெள்ளை யன்னம் காண்மின்"

என்று சிந்தாமணிக் கவிஞர் செம்மையாய் அருளிப்போந்தார். மெல்லிய இதழ் விரிந்து மணம் கமழும் கமல மலர்களில் மெல்லியல் வாய்ந்த அன்னம் துயிலும் அழகு எஞ்ஞான்றும் இயற்கவிஞரது கருத்தைக் கவர்வதாகும். இவ்வாறு மெல்லிய உணவருந்தி, மெல்லிய மலர்களில் துயின்று இனிய நிழல் அமைந்த பொழில்களில் பயின்று வாழும் பண்பமைந்த அன்னத்தின் மென்மையை அறிந்த அறிஞர் மெல்லியல் வாய்ந்த மாதரை "அன்னம்" என்று கூறும் அழகு அறிந்து மகிழத்தக்கதாகும். அமுதினுல் எய்திய பாவை போல் அமைந்த திருமகளைப் புகழப்போந்த வானர வேந்தனுய வாலி,

"ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின்வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனைபோலும் செய்கை"

என்று அஞ்சன வண்ணனுய இராமனை நோக்கிக் கூறும் அருமை சான்ற

மொழிகள் இங்கு அறியத் தக்கனவாம். செந்தாமரையில் வாழும் திருமகளை யும் அழகினால் வென்ற சீதா தேவியை "மிதிலை அன்னம்" என்று வாலி கூறும் மொழிகளில் அம்மங்கையின் மென்மையும் இனிமையும் நன்கு இலங் கக் காணலாம்.

இன்னும் அழகிற்சிறந்த அன்னம் தீம்பாலுண்டு திளைக்குமென்றும், பாலை நீரோடு கலந்து வைப்பினும் நீரைப் பிரித்துப் பாலையே உண்ணும் பண்பு வாய்ந்ததென்றும், கவிஞர் அப்பறவையின் பெற்றியைப் பாராட்டுகின்றார்கள். இவ்வாறு புத்தமுதம் பருகும் புனித அன்னம், காதல் நிறைந்த கன்னியர்க்கும் காளையர்க்கும் அளவிறந்த களிப்பருளும் களிப்பாகும். அகத்தில் நிறைந்த அன்பினால் நலிந்து மெலிந்து, இயற்பொருள்களைக் கண்டு இளைப்பாறுமாறு போதுகள் மலரும் பொய்கையின் அருகே செல்லும் காதலர் அங்கு இன்புற்று வாழும் அன்னங்களைக் கண்டு ஆராத அன்பினால் அவற்றை அருகே அழைத் துத் தம் அன்பர்பால் தூதனுப்பும் முறை கவிநயம் சான்ற காவியங்களில் கனிந்து இலங்குவதாகும். விதர்ப்ப நாட்டு வேந்தனது மகளாய் அமைந்த "தமயந்தி" என்னும் தையலின் மையலிலே தாழ்ந்து அவள் உருவத் தையே தன் உள்ளத்தில் எழுதி மகிழ்ந்த நளன் என்னும் மன்னன் நற்றாம ரைக் குளத்தில் துயின்ற நல்லன்னத்தைப் பிடித்து அப்பறவையை, தன் கருத்திலமைந்த காதல் மங்கையிடம் தூது போக்கினானென்று அவ்வேந்த னது வரலாறு விளங்கக் கூறுகின்றது. அன்னம்போன்ற மென்மை வாய்ந்த மங்கையிடம் அன்னமே தூது செல்லுதற்குரியதென்று தேர்ந்து அப்பறவை யைத் தூதுபோக்கிய அரசன்,

"இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல்
இவ்வளவிற்காதல் இயம்புங்கொல்"

என்று அவ்வன்னத்தின் வரவை ஆர்வத்தோடு எதிர்நோக்கினானென்று புக ழேந்திப் புலவர் கூறும் பொன்மொழிகள் அன்பு செறிந்தனவாம். இங்ஙனம் மன்னனது மனவாட்டம் திருத்துமாறு மங்கையிடம் தூது சென்ற அன்னம் கனிமலர்ச் சோலையில் களித்து விளையாடிய கன்னியின் முன்னே போந்து காதலை வளர்த்து,

"செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளன் என்பான் மேனிலத்தும் நானிலத்து மிக்கான்
உளன் என்பான் வேந்தன் உனக்கு"

என்று நளனது பெருமையை நன்மொழிகளால் இசைத்து இருவர் மனத்தை யும் அன்பினால் ஒருமைப்படுத்தியதென்று நளவேந்தன் காவியம் நன்கெடுத் துரைக்கின்றது. இவ்வாறு அன்பினால் நலியும் காதலர்க்கு அருந்துணையாய்

அமையும் அன்னத்தை அன்பே வடிவாய இறைவனிடம் தூது அனுப்பும் ஆன்றோரது மொழிகள் அறிந்து மகிழத்தக்கனவாம். இறைவன்பால் இடையறாப் பேரன்பு வாய்ந்து அவன் அருளையே வியந்து பாடிய திருஞான சம்பந்தர் அழகுற விளங்கிய அன்னங்களைக் கூவியழைத்து அப்பறவைகளைத் தலைவனாய ஈசனிடம் தூது அனுப்பும் முறையில் தூய அன்பின் தன்மை இனிது இலங்குகின்றது.

"சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலி கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்கள் விண்ணோடு மண் மறைகள்
தேற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே"

என்று திருஞான சம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்த சொற்கள் தேனினுமினியவாய்த் தித்திக்கக் காணலாம். நீர்வளமும் நிலவளமும் நிறைந்த சண்பைமா நகரில் செஞ்சாலிக் கதிர்கள் செழித்து வளர்ந்து அசைந்தாடுகின்றன. வற்றாது நீர் நிறைந்த வயல்களில் கண்ணினைக் கவரும் கமல மலர்கள் களித்து இலங்குகின்றன. இக்கமல மலர்களில் அன்னங்கள் அழகுற அமர்ந்திருக்கின்றன. இவ்வாறு செஞ்சாலிக் கதிர்கள் எம்மருங்கும் கவரி வீச இனிய கமலமலரில் இன்புற்றிருந்த அன்னங்களை இன்னலம் வாய்ந்த ஈசனிடம் தூதுபோக்கும் முறை மிகச் செம்மை வாய்ந்ததாகும். ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த ஈசனது இணையடி சேர்ந்து மாறிலா இன்பத்தில் மகிழும் பேறு பெறக் கருதிய சம்பந்தப் பெருமான் அத் திருவடியின் பெருமையை அன்னத்திற்கு அறிவிக்கும் அழகு சாலவும் இனியதாகும். விதிக்கும் விதியாய், விழுமிய பொருளாய் விளங்கும் விமலனது திருவடிப் பெருமையை வியந்து பாடப்போந்த மற்றொரு பெரியார்,

"அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்தன் ஆருயிர் அதனை
வவ்வினாய்க் குன்றன் வண்மை கண்டடியேன்
எந்தைநீஎனை நமனறமர் நலியின் இவன்
மற்றென் அடியான் என விலக்கும்
சிந்தையால் வந்து உன் திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன் கூருளானே"

என்று அன்பர்க்கு அருள் செய்யும் இறைவனது பெருங்கருணைத் திறத்தை உருக்க மொழிகளால் எடுத்துரைத்தார். "அடைக்கலம் புகுந்த ஓர் அந்தணனைக் காக்குமாறு காலனைக் காலால் உதைத்த என் கண்மணியே! நினைந்துருகும் அடியாரது நெஞ்சில் ஊற்றெடுத்துப் பெருகும் பெருங்கருணைத் தடங்

கடலே! காலனையும் காய்ந்த உன் கருணையை அறிந்து உன்திருவடி அடைந்தேன். என்னை நலியும் இடர்களைந்து இன்பம் அளிப்பாய்" என்று அன்பர்கள் ஊன்கரைந்து, உயிர் கரைந்து போற்றும் திருவடியின் பெருமையைத் திருஞான சம்பந்தர் அன்னங்களுக்கு அறிவிக்கின்றார். அத்தகைய அடியின் கீழமைந்து பேரின்பப் பெருநலம் துய்க்கும் பெருமையை வேண்டி அப்பதம் அருளுமாறு அன்னத்தைத் தூது அனுப்புகின்றார். இவ்வாறு நிரம்பிய காதலால் மென்மை வாய்ந்த அன்னங்களைக் கூவி அழைத்து அவற்றின் வாயிலாகத் தம் அன்பின் பெருக்கை அறிவிக்கும் ஆன்றோரது உள்ளம் அன்புவடிவாய் இலங்கக் காணலாம்.

இன்னும் மரங்கள் செறிந்து மணங்கமழும் மணிப்பூஞ்சோலைகளில் திண்ணிய அன்பின் திறத்தினை அன்பர்க்கு நினைவூட்டும் பறவை அன்றிலே யாகும். இரை யெடுக்கும் போதன்றி இறைப்பொழுதும் பிரியாத அன்றில் காதலரது கருத்தைக் கவர்ந்து அவர் அகத்தமைந்த அன்பைக் கிளருதல் இயல்பே யன்றோ? இவ்வாறு இடையறாத இன்பம் நுகர்ந்து இனிது வாழும் அன்றிலை நோக்கித் திருநெறித் தலைவராய திருஞான சம்பந்தர் அருளும்மொழிகள் அன்பெனும் கனியில் அமைந்த அருஞ்சுவையாகும்.

"முன்றில்வாழ் மடற் பெண்ணைக் குரம்பை வாழ் முயங்குசிறை
அன்றில்காள், பிரிவுறு நோய் அறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவு திருத்தோணி புரத்துறையும்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலைக் கூறீரே."

என்று பிள்ளைப்பெருமான் கூறும் மொழிகள் கூர்ந்து அறியத் தக்கனவாம். அன்பின் சுவை அறிந்த அன்றில்காள்! தென்றல் புகுந்துலாவும் திருத்தோணி புரத்தில் என் கருத்துக்கினிய காதலன் உறைகின்றான். அப் பெருமானைக் காணப்பெறாது என் மேனி மெலிந்து எங்கும் பசலை படர்ந்து இடர்ப்படுகின்றேன். இவ்வாறு நான் ஏங்கி நிற்கும் நிலையை என் காதலர்க்கு எடுத்துரைப்பார் எவரையுங் காணேன். ஆதலால் காதல் நயம் அறிந்து களிக்கும் அன்றில்காள்! நீரே என் தலைவனிடம் சென்று என்னிலையை எடுத்துரைக்க வேண்டும்" என்று அன்றிலை நோக்கி ஆளுடைய பிள்ளையார் கூறும் அன்பார்ந்த மொழிகள் அகத்துறை அழகுவாய்ந்து அந்தமிலின்பம் அளிக்கும் இறைவனது பேரருளின் பெருமையை இனிது விளக்கக் காணலாம்.



---

அம்மை குத்திக்கொள்ளுவதால் வைசூரி நோய் தீர்ந்துவிடாதென்று பிரசாரம் செய்வதும், ஊரைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவதிலேயே நோய் வாராமல் தடுக்கும் அம்சம் இருக்கிறது என்று கூறுவதுமாகிய அம்மை குத்து மறுப்புச் சங்கம் ஒன்று லாகூரில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.



# வணிக தர்மம்.

("கலாவதி")

## செல்வநாடி.

(589-ம் பக்கத் தொடர்ச்சி)

[ஆங்கிலப் பேரறிஞராகிய Ruskin ஆசிரியர் எழுதிய "Unto This Last" என்னும் நூலின் மொழி பெயர்ப்பு.]

"கண்ணிற் சொலிச் செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே ஆயினும்—தண்ணளியால்
மன்பதை ஓம்பாதார்க் கென்னும் வயப்படை மற்று
என் செய்யும் ஆணல் லவர்க்கு.

தேசத்துச் செல்வத்தை விருத்தி செய்யும் தொழில் உடைய வணிகர் கடமை இன்னதென ஆராய்ந்தோம். இப்பொழுது செல்வம் ஆவது யாது? என்பதை ஆராய்வோம்.

"செல்வம" என்பது ஏற்றத்தாழ்வு குறிக்கும் பதமே என்பதைப் பலர் மறந்து விடுகின்றனர். வடக்கு எனவே தெற்கு என்பதும் பெறப் படுதல் போல், செல்வம் என்பது தனக்கு எதிராகிய வறுமை உண்மையையும் குறிக்கும். செல்வம் என்பது தனிப்பண்பைக் குறிப்பது போலவும், சில யுக்தமான முறைகளைக் கையாளுவதால் யாவரும் செல்வர்களாக முடியும் என்றும் கருதுபவர்கள்போல் பலர் பேசுகிறார்கள். ஆனால் "செல்வம்" என்பது மின்சாரம்போல் சமனநிலை இல்லாத வழியே சக்தி பெறுகின்றது. ஒரு பொருளில் எங்கும் சமமாக மின்சாரம் பரவி இருக்கும்போது அம் மின்சாரசக்தி காரியப்படமாட்டாமல் வாளா கிடக்கின்றது. இதனை மாற்றி ஒருபுறம் விதி (Positive) சக்தியும் மறுபுறம் மறை (Negative) சக்தியும் முனைவுறுத் தப்பட்ட போதே இச்சக்தி தொழிற்படும். இதுபோலவே, உன் கையில் உள்ள ஒரு பொன்னுக்குச் சக்தி உன் அயலவர் ஒரு பொன் இல்லாமையினாலேயே ஏற்படுகின்றது. பிறர் அப்பொன்னை விரும்பாவிடின் அதனால் உனக்கு ஆம் பயன் ஒன்றுமில்லை. அதற்கு உள்ள சகதி எல்லாம் மற்றவர் தேவையையும் விருப்பத்தையும் பொறுத்ததே. ஆகவே, நீ செல்வனாவதற்கு உபாயமாவது நிச்சயமாகவே உன் அயலவனை வறியவனாகவே வைத்திருக்கும் உபாயமே.

இருவகைச் செல்வத்தில் ஒரு வகையான இவ்வியாபார செல்வம் கொடுக்கல் வாங்கல்களைப் பற்றியது. இது தனி மனிதர்கள் சட்ட பூர்வமாக அல்லது தார்மிகமாக வேறு மனிதர்களின் உழைப்புக்கு உரிமையோ மேலதிகாரமோ ஈட்டி யிருப்பதைக் குறிக்கும்.

தேசப் பொருளாதாரச் செல்வமாவது, தகுந்த காலத்திலும் இடத்திலும் பிரயோசனமான அல்லது இன்பகரமான பொருட்களை ஆக்கி, அவை பழுதுறாமற் காத்து, தக்கபடி பகுத்து நுகர்வதேயாகும். உரிய காலம் தவறாது அருவி வெட்டும் உழவன், நல்ல மரத்தில் கப்பல் செய்யும் தச்சன், பதமாகக் குழைத்த சாந்தில் நல்ல கல்லை வைத்து வீடு கட்டும் சிற்பி, வீட்டில் உள்ள தட்டு முட்டுச் சாமான்கள் பழுதுறாமற் காத்து அட்டிற் சாலையிலும் வீண் செலவு இல்லாது ஓம்பும் இல்லக்கிழத்தி, தன் குரலைப் பழக்கிச் சரியான நிலையில் வைத்திருக்கும் பாடகன், இவரெல்லாம், முடிவான, உண்மையான கருத்தில் தேசபொருளாதார விருத்திக்குத் தம் பணி புரிபவரே; இவர் எல்லாம் தேசத்தின் செல்வத்தையும் நல்வாழ்வையும் சதா விருத்தி செய்பவரே.

செல்வம் இரு திறப்படும். வியாபாரச் செல்வம் பிறர் உழைப்புக்கு உரிமையைக் குறிப்பது. பொருளாதாரச் செல்வம் ஜீவாதாரமான பொருட்களின் தொகுதியைக் குறிப்பது.

வியாபாரச் செல்வம் ஒருபுறத்தில் செல்வமோ உரிமையோ குறிக்கும் அவ்வளவுக்கு மறுபுறத்தில் வறுமையோ கடனோ குறிப்பதாகும். ஆகவே, வியாபாரச் செல்வம் இருப்பது தேசத்தின் பொருளாதார நிலையிலோ நல்வாழ்விலோ அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதையே குறிக்கும் என்பதற்கில்லை. ஆயினும், இவ் வியாபாரச் செல்வம் (உழைப்பிற்கு உரிமை) ஏறக்குறைய எப்பொழுதுமே உண்மைச் சொத்து (ஜீவாதாரமான பொருட்களும் அவற்றை ஆக்குதற்கான கருவிகளும்) ஆக மாற்றிக்கொள்ளக் கூடியதாகவும், உண்மைச் சொத்து உழைப்பை ஆளும் உரிமையாக உடனே மாற்றிக்கொள்ளக் கூடாததாகவும் இருப்பதால், நாகரிகம் வாய்ந்த தேசங்களில் பெரும்பான்மையும் செல்வம் என்பது வியாபாரச் செல்வத்தையே குறிப்பது ஆயிற்று. தங்கள் உடைமை இவ்வளவு என்று கணக்கிடுங்கால் மனிதர் தம் பொன்னின் மதிப்பை அது கொண்டு வாங்கக்கூடிய ஆடு மாடு நிலம் புலங்களைக்கொண்டு அளவிடுவதை விட்டு, தம் ஆடு மாடு நிலம் புலங்களை, அவற்றை விற்றுப் பெறக்கூடிய பொன்னின் அளவைக்கொண்டு மதிப்பிடுவாராயினர்.

மனித சமூகத்தில் இங்ஙனவு பயின்று வருதற்கு இன்னொரு காரணமும் உண்டு. உழைப்பை ஆளும் உரிமை இன்றி உடைமைகள் ஒருவனுக்குப் பயன் படா. ஒருவனுக்கு ஆங்காங்கு மண்ணில் பொற்பாளங்கள் உள்ளதாய் பலவிதப் பயிரும் வளர்தற்குற்ற செழிப்புள்ள பெரிய நிலப்பரப்பும், அதில், கணக்கில் அடங்காத பசு மந்தைகளும், வீடுகளும், தோட்டங்களும், சோலைகளும், பிரயோசனப்படக்கூடிய பல பொருட்கள் நிறைந்த கருவூலங்களும் இருப்பதாகவும், கூலி வேலை செய்வதற்கு ஆள் மாத்திரம் கிடைப்பதில்லை என்றும் கொள்வோம். கூலிக்கு ஆள் வருவதென்றால் யாராவது வறியவராக இருந்து அவனது பொன்னையோ தானிய தவசங்களையோ விரும்பி அவற்றிற்காக வேலை செய்ய வரவேண்டும். இவனது பொன்னையோ பொருளையோ விரும்புபவர் (வறியவர்) எவருமே இல்லை என்றும், இதனால் கூலிக்கு ஆளே கிடையாது என்றும் வைத்துக்கொள்வோம். அப்படியாயின், இவன் தனக்கு வேண்டிய உணவைத் தானே பாகஞ்செய்து கொள்ளவேண்டும்; தன் உடைகளைத் தானே சுத்தஞ்செய்துகொள்ளவேண்டும்; தன் நிலத்தைத் தானே உழுதல் வேண்டும்; தன் பசுக்களைத் தானே மேய்த்தல் வேண்டும்; இன்னும், தனக்கு வேண்டிய வேலைகளை யெல்லாம் தன் கையினாலேயே செய்து

முடிக்கவேண்டும். இவன் நிலத்தில் உள்ள பொன்னும் மணியும் ஆண்டுள்ள கூழாங்கற்களளவே பயன் படும். கருவூலங்களில் உள்ள நுகர் பொருட்களும் இவன் அவற்றை உபயோகிப்பது முடியாத காரியமாகையால் பயனின்றி அழியும். இன்னொரு மனிதன் உண்பதினும் உடுப்பதினும் அதிகமாக இவன் உண்பதும் உடுப்பதும் இயலாத காரியம். இவன், வாழ்க்கையில் சர்வ சாதாரண செளகரியங்களைப் பெறவே கடுமையாக உழைக்க வேண்டும். ஆகவே முடிவில் இவன் வீடுகளை நன்னிலையில் வைத்திருக்கவோ, நிலம் முழுவதையும் பண்படுத்தி வைத்திருக்கவோ முடியாமையால் அவை பாழடையும். இவன் ஏழைபோல ஒரு சிறு குடிலையும் தோட்டத்தையுமே நன்னிலையில் வைத்திருந்து அனுபவிக்க முடியும். சூழவுள்ள பாழ் நிலத்தைத் தனது என்று சொல்வது தன்னைப் பரிகசிப்பதற்கான நிலைமைக்கு வந்துவிடும்.

மனிதரில் மிகப் பேராசை பிடித்தவரும் கூட இத்தகைய செல்வத்தை இந்நிலைமையில் ஏற்றுக்கொள்ள விரும்ப மாட்டார்கள் என்றே கருதுகிறேன். செல்வத்தின் பெயரால் மனிதர் விரும்புவது பிற மனிதரை ஆளும் பெருமையே. மிகச் செம்பாகமான கருத்தில்: தமக்கு வேண்டியபடி கூலியாள் வியாபாரி, சித்திர வினைஞன் ஆதியவர்களின் உழைப்பைச் செலுத்தும் சக்தியும்—இன்னும் விரிவான கருத்தில்நல்லனவும் தீயனவும் இவை இரண்டும் அல்லனவும் ஆகிய பல்வேறு காரியங்களை முடிக்கத் தேச ஜனங்களிற் பெருந்தொகையினரை ஏவி நடத்தும் உரிமையுமே செல்வத்தை விரும்புவோரது குறிக்கோள் ஆகும். இத்தகைய செல்வத்தின் சக்தி அதற்கு அமைவோரின் வறுமையின் அளவுக்குச் சரியொக்கக்கூடியோ குறைந்தோ இருக்கும். நம்மோடொத்த செல்வம் உடையவராய் அரிய பொருள் ஒன்றுக்கு நாம் கொடுக்கும் விலை தாமும் கொடுக்கக்கூடியவர்களாயுள்ள தனிகர் தொகைக்கு எதிரொக்கத் திரிவதாகவும் இருக்கும். உதாரணமாக, ஒரு பாடகன வறியவனையின், அவனுக்குப் பரிசில் தருபவர், ஒருவரே இருந்தால் அவன் குறைந்த பரிசிலுக்குப் பாடுவான்; இருவர் அல்லது பலர் இருந்தால் பணம் அதிகம் தருவார்க்கே தன் இன்னிசையை அளிப்பான். ஆகவே தாதாவின் செல்வத்தின் சக்தி, (—தன் மேலெல்லையை அடைந்தபோதும் விகலமானதும் சந்தேகாஸ்பதமானதுமான இச்செல்வாக்கு—) முதவில் பரிசிலனது வறுமையையும், பின் தாதாவோடொத்த செல்வம் உடையர்களாய்த் தாமும் இசை கேட்க முந்தும் தனிகர் தொகையின் குறைவையும் பொறுத்ததே. ஆகவே, சாதாரண கருத்தில் செல்வம் தேடுவதாவது தனக்குப் பணம் சேர்ப்பது மட்டுமல்ல; தன்னிலும் குறையவே பிறர் பணஞ் சேகரிக்க முடியுமாறு செய்வதுமாம். நிதானமாகக் கூறுமிடத்து, நமக்குச் சாதகமாக, கூடிய அளவு சமத்துவ ஹீனத்தை ஆக்கிக் கொள்வதே செல்வம் தேடுவதாம்.

இனி, இத்தகைய சமத்துவ ஹீனம் தன்னிலேயே தேசப் பொது ஜனங்களுக்கு நன்மையோ தீமையோ தருவதாகாது. இச் சமத்துவஹீனம் தப்பாமல் நன்மையே தரும் என்னும் தவறான கருத்தே பொருளாதார சம்பந்தமாகப் பெரிதும் வழங்கும் போலிக் கொள்கைகட்கெல்லாம் ஆதாரம். இவ்விஷயத்தில், என்றும் மாறாத நிரந்தரமான விதி யாதெனில், இச் சமத்துவ ஹீனத்தால் நன்மை ஏற்படுவது, முதலில், இதை ஏற்படுத்தக் கையாளப்பட்ட முறைகளையும், பின்னர் எந்த நோக்கத்தை நிறைவேற்ற இச் சமத்துவ ஹீனம் உபயோகிக்கப்படுகிறது என்பதையும் பொறுத்ததாகும். அநீதியான

முறைகளால் ஏற்பட்ட சமத்துவ ஹீனம் அது ஆக்கப்பட்டபோது நிச்சயமாகவே அதற்கு இடம் அளித்த தேசத்திற்குத் தீங்கு விளைத்துள்ளது. அநீதியாகப் பிரயோகிக்கப்படும்போது அவ்வாறு பிரயோகிக்கப்படும் செல்வம் தான் உள்ளவரையும் இன்னும் அதிக தீமையே விளைவிக்கும் என்பதிலும் ஐயம் இல்லை. ஆனால், நீதி தவறாமல் உண்டாக்கப்பட்ட சமத்துவ ஹீனமோ ஆக்கப்படும்போது தேசத்துக்கு நன்மை அளிக்கும்; தகவுற உபயோகிக்கும்போது இன்னும் அதிக உதவியே புரியும்.

முயர்சியும் செங்கோன்மையும் உள்ள நாட்டில், பலதரத்து ஆற்றலுடைய பலவேறு மனிதர், தம் சக்தியைப் பூரணமாக உபயோகித்தறிந்து, பல்வேறு தேவைகளுக்குத் தகவறிந்து உபயோகித்தலால், அவர்கள் தொழிலின் தன்மைசகும் அத்தொழிலாலாகும் பயனுக்கும் ஏற்பப் பிரதிபலன் பெறுவர். இதனாலாம் சமத்துவ ஹீனங்கள் தம்மில் வேற்றுமை யுடையனவாமன்றி முரண்படுவன அல்ல.

மடி மிருந்து நல்லாட்சி குன்றிய தேசத்தில், பலதரத்து அழிவுறு நிலைகளும், துரோகத்தின் வெற்றிகளும், தமக்கு ஏற்ற பெற்றி (முறையே) அமைவும் ஆட்சியும் பொருந்திய ஒரு முறையை வகுக்கின்றன; ஒன்றுடன் ஒன்று இசைந்து ஒழுங்கு தழைக்கும் பலதரத்துச் சக்திகட்குப் பதில், காதகத்தாலும் துரதிர்ஷ்டத்தாலும் முறையே உண்டாகும் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்துகின்றன.

ஒரு தேசத்தில் செல்வம் உலவுவது உடம்பில் செந்நீர் உலவுவதற்கொப்பாம். இன்ப உணர்ச்சியாலும் நல்லுழைப்பாலும் தேகத்தில் இரத்தம் வேகமாக ஓடுவதுமுண்டு. இன்னொரு காரணத்தால், (சுர முதலிய நோய் மிகுதி காரணமாக) இரத்தம் வேகமாக ஓடுவதுமுண்டு. ஒன்று ஆரோக்கியமுற்ற நல்வாழ்வைக் குறிக்கும்; மற்றது மாணம் சமீபித்து இருப்பதற்கு அறிகுறி.

இவ்வுண்மை ஏகதேசமாக அன்றி முற்றுவமை ஆகப் பொருந்தும். இரத்தம் உடம்பில் ஓரிடத்தில் தங்கி நிற்பது தேகசுகத்திற்குக் கேடே ஆவது போலத் தேசத்திலும் செல்வம் ஒருபுறத்தில் ஒதுங்கிக் கிடப்பதும் தேச பொருளாதாரம் சரியான நிலைமையில் இல்லை என்பதைக் குறிக்கும். (தொடரும்)

---

ஏஜண்டு:—"எங்கள் கம்பெனிக்கு லக்ஷக்கணக்கான மூலதனம் இருக்கிறது"

பெரிய மனிதர்:—"அப்படியானல் என்னை ஏன் முப்பதுபங்கு எடுத்துக்கொள்ளச் சொல்லிப் பிராணனை வாங்குகின்றாய்?"

***

ஒருவர்:—"தேய்த்தால் தோல் மிருதுவாகும் என்று நீ கொடுத்த தைலம் ஒரு பிரயோஜனமும் இல்லை"

கடைக்காரர்:—"ஆனல் என்னிடம் தோல்களைப் பளபளப்பாக்கும் தைலம் இருக்கிறது; அதைத் தேய்த்தால் எப்பேர்ப்பட்ட கெட்டித் தோலாயிருந்தாலும் பதமாகிவிடும்"

# "சொன்னால் சொல்லட்டும்"

(பே. இராமாநுஜன்.)

கோபாலபுரத்துப் பெரிய மிராசுதாரர் சாமி ரெட்டி யென்பவர். அவருடைய பெற்றோர்கள் அவரைப் பிள்ளைப் பருவத்தில் "சாமி" என்று செல்வமாக அழைத்து வந்தனர். அந்தப் பெயரே அவர் பெரியவரான பின்பும் வழங்கத் தொடங்கியது. அவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறிது பயிற்சி பெற்றிருந்தார். சீர்திருத்தத்திலும் கொஞ்சம் ஆசையுள்ளவர். எதையும் காரணமில்லாமல் பின்பற்றுவது மூடத்தனம் என்பது அவரது கண்டிப்பான கொள்கை. நெற்றியில் சமயக்குறிகள் அணிவதை விடுத்து வருடங்கள் பல வாயின. பிச்சைக்காரர்களைக் கண்டால் அவருக்குப் பெரிய வயிற்றெரிச்சல். "இந்தச் சோம்பேறிகளால்தான் நம்நாடு இத்தகைய கேவல நிலைமை யடைந்துளது; காந்தியாட்களுக்குப் போட்டதுபோல் ஒரு சட்டம் போட்டு இவர்களையும் ஏன் அடக்கக்கூடாது?" என்ற முணுமுணுப்போடு பிச்சைக்காரர்களைத் தம் வீட்டில் மட்டுமன்றித் தம் வீதி வழியேகூட நடக்க விடாமல் விரட்டியடிப்பார். இன்னொன்று சொல்ல மறந்து விட்டேன்; எதை முதலில் சொல்லவேண்டுமோ அதை முதலிற் சொல்லாமற் போனது எனது தவறுதான். இவர் ஒரு ஜில்லா போர்டு மெம்பருங்கூட. இப்படிப்பட்டவருக்கு ஏகபுத்திரி ராஜாம்பாள்; பதினைந்து வயதுடையவள்; இன்னும் திருமணமில்லை. அவ்வூர் வேம்புசாத்திரி மகன் வேணுவையர் தினந்தோறும் வீட்டிற்கு வந்து ஆங்கிலமும் "ஹார்மோனியமும்" சொல்லிக்கொடுத்துக் கொண்டு வந்தார். பெண் இயற்கையிலேயே நல்ல அறிவு வாய்ந்தவளாகையால் 14-வயதிற்குள் ஆங்கிலத்தில் சிறிது பயிற்சியும், ஆர்மோனியத்தில் நல்ல பயிற்சியும் அடைந்தாள். அவளுக்கு இன்னும் கற்க ஆசைதான்; அவள் தந்தைக்கும் அப்படியே. ஆனால், வீட்டிலுள்ள அவரது வயது சென்ற தாயாரின் தொந்திரவு பொறுக்க வியலாமல் தன் மகளின் கல்விக்கு முற்றுப்புள்ளி கொடுத்து விட்டார். இதென்ன எழவு! எப்பொழுது பார்த்தாலும் எருமை கத்துகிறமாதிரி 'யொய் யோய்' என்று. ராஜம்! பிசாசுமாதிரி கன்னங்கரேல் என்றிருக்கும் அதைத் தூர எறிந்து விட்டு, இதோ இந்தத் திருவையில் கொஞ்சம் அரிசையைப் போட்டுச் சுழட்டிப் பார்! காதுக்கு எவ்வாறு இனிமையா யிருக்கும்! அது கஷ்டமாயிருந்தால் உன் ஐயா விடத்தில் சொல்லி மூக்கணசாரியை ஒரு ராட்டினம் செய்து தரும்படி வாங்கி நூற்றுப் பாரேன்; என்ன சப்தம்! கிருஷ்ணமூர்த்தி அப்பொழுது புல்லாங்குழல் வாசித்தாராமே, அப்படி யிருக்கும்; வேலைக்கும் வேலை; வேலைக்குத் தகுந்த கூலியும் உண்டு" என்று அம்மூதாட்டி அடிக்கடி சத்தமிடுவாள். சாமி ரெட்டி தன் தாயாருக்குப் பயந்து தன் மகளின் படிப்பை நிறுத்தவில்லை. அவள் சொன்ன ஒரு சொல்லுக்குப் பயந்தே நிறுத்தி விட்டார். அதுதான் "ராட்டினம்" என்பது. தனது தாயார் ராட்டினம் ராட்டினம் என்பதால் யாராவது

தன்னையும் "காந்தி ஆள்" என்று நினைத்துக் கொள்வார்களோ என்பதுதான் காரணம். ஒத்துழையாமை ஓங்கி நின்ற காலத்திலே, இவருடைய ஊரிலும் காங்கிரஸ்காரர்கள் வந்து ஒரு கூட்டம் போட்டுப் பேசினர். அப்பொழுது நமது ரெட்டியார் ஊரில் இல்லை. கூட்டம் முடிந்து தொண்டர்கள் எல்லாம் சென்ற மறுநாள் ஊருக்கு வந்தார். வந்து சங்கதி யறிந்ததும், முகஞ் சிவக்க, உடல் வியர்க்க "அந்தப் பசங்கள் நானில்லாத சமயம் பார்த்தல்லவா இங்கு வந்து கும்மாளம் அடித்துப் போய் விட்டார்கள்; இனி இந்தப் பக்கங் களில் தலைகாட்டட்டும் பேசிக் கொள்கிறேன்" என்று கர்ஜித்தார். இந்த கர்ஜனை தாசில்தார், கலெக்டர் முதலியவர்களின் காது வரைக்கும் போக முயன்றார். இவருக்கு "ஹிந்து" வார மும்முறைப் பத்திரிகை வந்து கொண்டிருந்தது. "பத்திரிகை படிப்பதா யிருந்தால் இங்கேயே படித்து விட்டுப் போகலாம்; எடுத்துப்போக முடியாது" என்று அவர் கூறியதால் சாஸ்திரி மகன் வேணு ஐயர் ரெட்டியார் வீட்டுக்குச் சில சமயம் பத்திரிகை படிக்க வருவார். பத்திரிகை படித்து முடிந்ததும் ரெட்டியார் "பேபரில் என்ன விசேஷம்?" என்பார். "விசேஷமா? ஒன்று மில்லை; எல்லாம் நடக் கிற சங்கதிதான் என்பார் ஐயர். "ஆமாம், எல்லாம் நடக்கிறதைத்தான் போடு கிறார்கள். எனக்கும் பேபரில் இஷ்டமில்லை; எதற்கும் ஒன்று வரட்டும் என்று எழுதினேன்" என்பார் ரெட்டியார். காந்தி கூட்டம் நடந்த சில நாளைக்குப் பிறகு, ஒருநாள் ரெட்டியார் வீட்டில் பத்திரிகை படித்துக்கொண்டிருந்த ஐயர் திடீரெனப் பேய் பிடித்தவர்போல் 'திறுதிறு'வென விழித்தார். பொருக் கென ரெட்டியார் எழுந்து "ஐயர்வாள்! என்ன, என்ன?" என்றார்.

ஐயர்:—இதென்ன பெருமோசமா யிருக்கிறது! பத்திரிகை போடும் பயல்கள் செய்கிற வேலை!

நடுக்கத்துடன் "என்ன சங்கதி?" என்றார் ரெட்டியார்.

ஐயர்:—"சங்கதியா; இதோ பாருங்கள் நான்கு நாளைக்கு முன்பு நடந்த காந்திகூட்டத்திற்கு நீங்கள் தலைமை வகித்தீர்களாமே" என்று பத்திரிகை நீட்டினார். ரெட்டியார் கை நடுக்கத்தோடு வாங்கி, தமக்குத் தெரிந்த அரை குறை ஆங்கில ஞானக் கண்கொண்டு பார்த்தார். "கோபாலபுரத்தில், அவ் வூர்ப் பெருஞ்செல்வரும் செல்வாக்குடையவரும் ஜில்லா போர்டு மெம்பரு மான சாமி ரெட்டியார் தலைமையில் பாரதியார் கீதங்களோடு ஓர் பொதுக் கூட்டம் நடந்தது" இதற்குமேல் அவர் படிக்கவில்லை. "ஐயரே! இந்த பேபர்காரர்களை என்ன செய்வது?" என்று வினவினார்.

ஐயர்:—அவர்கள்மேல் பிசகில்லை; பத்திரிகை ரிபோர்டர்கள்தான் இதற் குக் காரணம்.

ரெ:—இதற்கு என்ன செய்யலாம்?

ஐ:—உடனே ஒரு மறுப்பு எழுதி விடுங்கள்.

அவ்வளவுதான், ரெட்டியார் தமிழ் ஆங்கிலபாஷைகளில் நடக்கும் தின சரி—வார மும்முறை—வாரம்—ஏன், மாதம் ஒருமுறை வெளிவரும் எல்லா பத் திரிகைகட்கும் மறுப்பு எழுதி விட்டார். "தான் தலைமை வகிக்கவில்லை யென்றும், அன்று தான் ஊரில் இல்லை யென்பதற்குத் தகுந்த சாட்சியம் இருக்கிறதென்றும், தான்ஊரில் இருந்திருந்தால் அன்று கூட்டமே நடந் திருக்காதென்றும்" எழுதி விட்டார். ஆனால் அவர் எழுதியதை அப்படியே

எத்தனை பத்திரிகைகள் வெளியிட்டன என்பதை நாமறியோம். இப்படிப் பட்டவர் தன் வீட்டில் "ராட்டினம்" என்று பேச இடங்கொடுப்பாரா? தன் மகள் படிப்புப் போனாலும் போகட்டும் அந்தப் பேச்சு இல்லாமலிருந்தால் போதும் என்று நினைத்து மகள் படிப்பதை நிறுத்தி விட்டார். பாட்டி தந்திரமுள்ளவள். அவள் நினைத்தபடி அந்த எருமைச்சத்தம் முன்புபோல் அடிக்கடி அவ்வீட்டில் இப்பொழுது நிகழ்வதில்லை. ஆனால் பாட்டிக்கு மற்றோர் ஆசை மனதிலிருந்தது!—தன் பேத்திக்கு தான் உயிரோடு இருக்கும் பொழுதே கல்யாணஞ் செய்துவிட வேண்டுமென்று. இதைப் பல வருடங்கட்கு முன்பே தன் மகன் சாமி யிடத்தில் சொன்னாள். அவர் "அதெல்லாம் இப்பொழுது கூடாது; பொம்மைக் கல்யாணம் செய்து வைப்பதா? வயது வந்த பிறகு தானே ஒரு புருஷனைத் தேர்ந்து சொல்லட்டும்" என்று கூறி வந்தார். இப்பொழுது ராஜத்திற்கு வயது 14. இனி மணமுடித்து விட வேண்டுமென்று நினைத்து, தன் மகள் கருத்தை யறியுமாறு தன் மனைவி யிடம் கூறினார். ஒருநாள் மீனம்மை தன் மகளிடத்துத் தனியே "உனக்கு இந்த வருஷம் கண்ணாலம் செய்துவிட வேண்டுமென்பது எல்லாருடைய ஆசை; நீ யாரை மணந்து கொள்ளுகிறாய்?" என்று கேட்டாள். அவள் நாணத்தால் தலை சாய்ந்த வண்ணமே "நான் ஒன்றும் சொல்வதற்கில்லை; உங்கள் விருப்பம்" என்பதை மறைமுகமாக "நாளை சொல்கிறேன்" என்றாள். தாயும் உண்மையென்று நம்பித் தன் வேலைகளைக் கவனிக்கச் சென்றாள். இறைவன் திருவருள் அவ்வாறிருக்குமென்று நாம் எங்ஙனம் நினைக்க முடியும்?

இந்த வருடத்துச் சோனை மழையால் பாறைகளிலும் வீதிகளிலுங்கூட ஊற்று ஓட ஆரம்பித்து விட்டது. கோபாலபுரத்திற்கு அருகில் ஓடும் காட்டாற்றில் ஊற்று நீர் "சல சல" என்ற ஒலியோடு சென்றுகொண்டிருக்கிறது. ராஜத்திற்கும் அவள் தாயார் மீனம்மைக்கும் நடந்த சம்பாஷணையன்று வெய்யில் நன்றாகக் காய்ந்தது. அதனால் அன்று ராஜம் ஆற்றிற்கு நீராடத் தனியே சென்றாள். ஆற்றில் நீர் மிகத் தெளிவாக ஓடும் அழகைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டு நின்றாள். தனக்கு மேற்கே சிறிது தூரத்தில், மணல்மேல் நாவல் மர நீழலில் ஓர் சிறுவன் உட்கார்ந்து கொண்டு மணலில் எதையோ ஒன்றைக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, அஃது என்னவென்று அறியச் சென்றாள். இளைஞன் ஒரு பத்திரிகையை மணல்மேல் விரித்து அதைப்பார்த்துக் கொண்டிருந்தான். ராஜாம்பாள் அருகில் வந்ததும் "அண்ணா! பேபரில் என்ன விசேஷம்? தனிமையாகப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்களே" என்றாள். மனதை எங்கேயோ செலுத்திக்கொண்டு தனிமையாக இருந்த அவன் இந்தப் பேச்சைக் கேட்டதும் திடுக்கெனத் தலை நிமிர்ந்து பார்த்தான். அவன் கண்களில் நீர் கலங்கிக்கொண்டிருந்தது.

இளைஞன்:—ராஜம்! இங்கே தனிமையாக எப்படி வந்தாய்?

ராஜம்:—அதிருக்கட்டும்; என்ன உங்களுக்கு நேர்ந்தது? முகம் சோர்வடைந்திருக்கிறது; கண்களில் நீர் ததும்புகிறது. அதென்ன "ஆனந்த போதினி"யா? உங்கள் மனதிற்குத் துன்பந்தரும் செய்தி அதில் என்ன இருக்கிறது?

இளை:—ராஜம்! நீ உலகமறியாதவள்; உனக்கும் எனக்கும் எவ்வளவோ

வேறுபாடு உண்டு. எனக்குத் துன்பந்தருவது உனக்கு இன்பமளிக்கலாம். அதை நீ அறிவதால் பயன் என்ன?

ராஜம்:—உங்கள் துயரைக்கண்டு மகிழ்பவளா நான்? அவ்வளவு கல் நெஞ்சு உடையவள் அல்லவே.

இளை:—உன்னைப்பற்றியல்ல; உனது தந்தையைக் குறித்தே சொன்னேன். என்னோடு நீ பேசிக்கொண்டிருப்பதை அவர் அறியினும் மனம் பதைப்பார்.

ரா:—ஒருவர் மகிழ்ச்சியொடு வாழும்பொழுது அவருடன் சேராதிருப்பினும் துன்பம் நேர்ந்தகாலை உடனிருந்து உதவுதல் நல்லோர் கடமையன்றோ? உங்கள் உறு துயரை விலக்க என்னால் இயல்வதாயின் முயல்வேன்; இலையெனின் ஆண்டவன் அருளை வேண்டி நிற்பேன். எங்ஙனமாயினும் தங்கள் துயரை என்பால் கூறலாகாதா?

இளை:—இதோ, இப்பத்திரிகையைப் பார்; இப்பொழுது மகாத்மா காந்தி உண்ணு விரதம் இருக்கிறாராம்; இன்றோடு ஒரு வாரமாகிறது. எவ்வாறுமோ, ஈசன் திருவுள்ளம் எப்படியோ? மகாத்மா சொல் தவறுபவரல்லவே; தன் எண்ணம் ஈடேறுதவரையில் உணவு கொள்வதில்லையாம்; ஆண்டவனே! எங்கட்கு நல்லறிவு தாராயோ?

ரா:—எண்ணம் நிறைவேற உண்ணு விரதமிருப்பதா? இது பைத்தியக்காரத்தனம்.

இளை:—காந்தியா பைத்தியக்காரர்; நம்முடைய பேதைமை தான் அவர் இந்நிலைமைக்கு வரக்காரணம். நம்மோடு வாழ்பவரை நாம் தீண்டத் தகாதவர் பார்க்கத்தகாதவர் என்று ஒரு சிலரை விலக்கியமையால் அவர்கள் நம்மவரினின்றும் பிரிந்து "கலப்புத் தொகுதி" வேண்டாம்; "தனித்தொகுதி வேண்டும்" என்று அரசாங்கத்தார்க்கு விண்ணப்பித்தனர். அரசாங்கமும் அவர் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டது. இதனால் நாம் இனி பலமிழந்த வராவோம் என்பதை யறிந்தும் நம்மவர் பலா ஊமைகளாயினர். ஒரு குடும்பத்தார் ஒன்றுபட்டு வாழும்பொழுதும், பிளவுபட்டுச் சிதறுண்டு போகும் பொழுதும் ஏற்படும் வலிமை எளிமைகளை நாம் உணர்ந்துள்ளோம். உலகமே ஒரு குடும்பமெனக்கொண்ட உத்தமர்க்கு இப்பிரிவு சகிக்குமா? என்று அப்பொழுதுள்ள நிலைமையையும், மகாத்மாவின் தூயவாழ்க்கையையும் விவரமாகக் கூறினன். ராஜாம்பாள் மனம் இளகிவிட்டது. தன் தந்தையின் நிலைமைக்கு வருந்தினாள்.

ரா:—அண்ணு! இதற்கு நம்மால் என்ன செய்ய முடியும்? (என்று கூறிக் கண் கலங்கினாள்.)

இளைஞன்:—எனக்கு ஒன்றும் தோன்றவில்லை; ஆண்டவன் தான் இனித் துணை. இதை நீ வெளிகுக் காட்டவேண்டாம். என்னால் நீயும் கெட்டாய் என்ற சொல் வரும். நாழிகையாகிவிட்டது. உன்னைத் தேடி யாராவது வரினும் வரலாம். நான் எனது வீட்டிற்குச் செல்கிறேன், விடைகொடு" என்று எழுந்து நின்றான்.

ராஜாம்பாள் கண்களில் நீர்த்துளிகள் உதிர்த்து, "மன அமைதியில்லாமல் என் செய்வது? அடுத்த பத்திரிகை எப்பொழுது வரும்?" என்று நாத்தடுமாற வினவினாள்.

இளை:—இன்னும் ஆறு நாட்களாகும். ஆனால் அதற்கு முன் உன் வீட்டிற்குப் பத்திரிகை வரும்; தெரிந்துகொள்ளலாம்.

ரா:—என் தந்தை ஒழுங்காகப் பார்ப்பதே கிடையாது; எனினும் நான் அறிந்து கூறுகின்றேன்:

* * *

அன்றிரவு ராஜாம்பாளுக்குத் தூக்கம் வரவில்லை. இரண்டு விஷயங்கள் அவள் அமைதியைக் கெடுத்தன. திருமணச் செய்தியொன்று; மகாத்மாவின் நிலைமை மற்றொன்று. "எவரை மணப்பது" என்ற கவலை இப்பொழுது அவளுக்கு இல்லை; மகாத்மாவின் உண்ணா விரதத்திற்கு என்ன செய்வது என்பதுதான் அவள் பெருங் கவலையாயிற்று. பயங்கரக் கனவுகள் பல கண்டாள். என்னென்னமோ பிதற்றினாள். ஆழ்ந்த நித்திரையில் அனைவரும் மூழ்கியிருந்தமையால் அவள் நிலைமையை அப்பொழுது ஒருவரும் அறிவதற்கில்லை; பொழுது புலர்ந்து நெடுநேரம் வரை அயர்ந்து படுத்திருந்தாள். பின்பு மீனம்மை எழுப்ப எழுந்து காலைக்கடன் முடித்து உணவு அருந்தியதும் திருமணப் பேச்சுத் தொடங்கியது. "இன்னும் ஒரு வாரம் வரைக்கும் ஒன்றும் கூறேனே; பின்பு பேசிக்கொள்வோம்" என்றாள் ராஜாம்பாள். மீனம்மையும் உடன் பட்டாள். ராஜாம்பாள் அநேகமாய் வீட்டை விட்டு வெளியே போவதில்லை. அவ்விளைஞனைக் கண்டு பேசினதுமுதல் மீண்டும் அவனைச் சந்தித்துப்பேச விருப்பங்கொண்டாள். எனினும் அன்று இயலவில்லை. மறுநாள் தனது தந்தைக்குப் பத்திரிகை வந்தது. வேணு ஐயரும் தனது தந்தையும் திண்ணையில் அமர்ந்து பின்வருமாறு சம்பாஷிப்பதை ராஜாம்பாள் ஜன்னல் வழியாகக் கேட்டுக்கொண்டு நின்றாள்.

வேணு:—காந்தியின் உண்ணா விரதம் முடிந்துவிட்டதாமே; சர்க்கார "கலப்புத்தொகுதி"யை ஒப்புக்கொண்டார்களாம்.

ரெட்டி:—இதென்ன பேதமை? அந்த அம்பேத்கார் எப்படி ஒப்புக்கொண்டார்? அது போகட்டும்; நமது தென்னாட்டு ஆதிதிராவிடர்கள் தான் எப்படி இடங்கொடுத்தார்கள்?

வேணு:—இதற்கெல்லாம் மாளவியாதான் காரணமாம்.

ராஜாம்பாள் தன்னையறியாமல் ஆநந்தக் கூத்தாடினாள்.

* *

கோபாலபுரத்தில் ஓர் சாமானியச் செல்வர் நெட்டாளம் ரெட்டி யென்பவர். அவர் இப் பூவுலகினின்றும் மறைந்து வருடங்கள் பலவாயின. பலரைப் போலும் இப்பூமியில் பிறந்து மறைந்தனராயினும் ஓர் அழியாப்பேறு பெற்றுவிட்டார். தாழ்ந்த வகுப்பாரைப் பற்றிய பேச்சு வரும்பொழுதெல்லாம் காந்தியடிகள் தமது நண்பர்களிடத்தில் நமது நெட்டாளம் ரெட்டியாரின் உயர்ந்த குணங்களைப் பற்றிப் பாராட்டிப் பேசுவார். மகாத்மா தென்னாப்பிரிக்காவில் இருந்தபொழுது இவர் பொருளீட்டுவதற்காக மனைவியோடு அங்குச் சென்று தாமும் தமது மனைவியுமாகத் தோட்டங்களில் கூலி வேலை செய்து வந்தனர். ஒருநாள் இவர்கள் தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருந்தபொழுது சூல் நிறைந்த ஒரு பெண் சிறிது நேரஞ் சென்று வேலைக்கு வந்தாள். அதைக் கவனித்துக்கொண்டிருந்த ஒரு சட்டைக்காரர் அவள் அருகில் சென்று "ஏன் இவ்வளவு நேரம்?" எனக் கோபத்தோடு கேட்டார்.

அதற்கவள் "துரையே! எனது கணவன் நேற்று முதல் படுக்கையாகக் கிடக்கிறார். அவருக்கு வேண்டுவன செய்துவர, சிறிது கால தாமதமாயிற்று; பொறுத்துக்கொள்ளவேண்டும்" என இரண்டு கைகளையும் கூப்பிக் கெஞ்சினாள். துரை "நாயே! உன் புருஷனையே பார்த்துக்கொண்டிருக்கிறதுதானே; இங்கு எதற்கு வந்தாய்? போ, வெளியே" என்று தன் கையிலிருந்த சவுக்கை ஓங்கினான். பெண் நடுநடுங்கி "சாமி, இன்றுமட்டும் ஏழையை மன்னிக்க வேணும்; கஞ்சி காச்ச ஒரு அரிசி வீட்டிலில்லை; எனது கணவரும் படுக்கையாகக் கிடக்கிறார்; என்னசெய்வேன்" என்று புலம்பினாள். அந்தவெள்ளையன் அவள் அழுகையைப் பொருட்படுத்தாது, சவுக்கால் நான்கு ஐந்து அடி ஓங்கி அடித்து, "இன்று முழுதும் நீ வேலை செய் அரைக் கூலிதான் தருவேன்" என்று கட்டளையிட்டுப் போய்விட்டான். அப் பெண்பாவை அவ்வடி பொறுக்காது துடிதுடித்துத் தரையில் விழுந்து புரண்டழுதாள். அருகில் வேலை செய்து கொண்டிருந்த ரெட்டியாருக்கு இது பொறுக்க முடியவில்லை. ஓடிப் போய்ச் சட்டைக்காரனை ஓங்கி ஒரே குத்தாகக் குத்திவிடலாமா என்று பதைத்தார். கீழே விழுந்து புலம்பும் அவள் நிலையைச் சிந்தித்தார். தானும் தனது மனைவியுமாக அவள் அருகில் ஓடி அவள் உடம்பைத் தடவினர். அடியால் அவள் உடம்பில் பலவிடங்களில் சடைசடையாகத் தடித்திருந்தது. கருப்பம் நிறைந்த அம்மங்கை அவ்வடிகளை எங்ஙனம் பொறுப்பள்? தங்கள் கூலி போனாலும் போகட்டும் வேலையே போனாலும் போகட்டும் என்ற துணிவுடன் ரெட்டியாரும் அவர் மனைவியும் அப்பெண்ணரசியைத் தோளிற் சுமந்து, வீட்டிற்குக் கொணர்ந்து வேண்டிய உதவி செய்து கொண்டிருந்தனர். நோயாளியாகிய இவள் கணவன் நாவறட்சியுறும்பொழுது நீர் கொடுக்கவும் அருகில் ஆள் இல்லாமையால், தன் துயரை ஒருவாறு பொறுத்துக்கொண்டு, தன் மனைவி அரிசியுங் கையுமாக மாலைப் பொழுதில் வருவாள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். ஐயோ! தெய்வமே! உலகில் நடப்பன அனைத்தும் உன் திருவிளையாடல்கள் என்கிறார்கள்; இந்நிகழ்ச்சியையும் அதனோடு எங்ஙனம் சேர்ப்பது? இற்செய்தி சில நிமிடங்களுக்குள் கூலிகள் பலருக்கும் தெரிந்தது. அது சமயம் மகாத்மா அவ்விடத்திற்குக் கூலிகளின் நிலைமையையறிய வந்திருந்தார். இச்செய்தி அவருக்கும் எட்டியது. உடனே அவர் தம்மோடு வேறு ஒருவரை அழைத்துக்கொண்டு ரெட்டியார் வீட்டுக்கு வந்தார். நிலைமையை அறிந்தார். மனந்தடுமாறினார். "ஐயா! நீங்களே பாக்கியசாலிகள்!" என்று ரெட்டியாரையும் அவர் மனைவியையும் புகழ்ந்து கொண்டாடினார். அதற்குள் அப்பெண்ணிற்கு வேண்டிய சிலர் அவ்வீட்டு வாசலில் வந்துகூடி "பிரபுவே! உங்கள் மலைபோன்ற அன்பிற்கு என்ன ஈடு செய்வோம்? தாழ்ந்த சாதிக்காரர்கள் என்று அறிந்திருந்தும் இவ்வுதவி செய்ய, அதுவும் வீட்டிற்குள் கொண்டுபோய்ச் சிகிச்சை செய்கிறீர்களே; நாங்கள் எல்லாம் சொந்தக்காரர்களாக இருந்து என்ன பயன்" என்று கண்ணீர் மாலை மாலையாகச் சொரிந்தனர். காந்தியடிகள் திடுக்கிட்டு "இப்பெண் என்ன வகுப்பு?" என்று வினவினார். ரெட்டியார் "இப்பெண் பள்ளர் (தே—கு—வேளாளர்) வகுப்பைச் சேர்ந்தவள்" என்றார்.

காந்தியடிகள்:—ஏற்கெனவே நீர் அறிவீரோ?

ரெட்டி:—ஐய, அறிவேன்.

காந்தியடிகள்:—"நீரே உத்தமர், நீரே உத்தமர்" என்று புகழ்ந்து கொண்

டாடி, "இனி இந்த ஊழியத்தை என்பால்விடும்; எனக்கு அறிமுகமான நண்பர் ஒருவர் வீட்டில் வேண்டிய வசதியுளது; இவள் கணவனையும் அங்கு அழைப்பித்து உடல் வலிமை வந்தபின்பு அவர்கள் வீட்டிற்கு அனுப்பிவிடுகிறேன்" என்றார். "இங்கேயே இருக்கட்டும்; ஏழையாலும் இயன்றன செய்யமுடியும்" என்றார் ரெட்டியார். இந்தச் சம்பாஷணையை வெளியே நின்று கேட்டிருந்த கூலிகள் தெய்வமே தங்கள் துணையாக இவ்வாறு வந்துளது என்று ஆநந்தக் கண்ணீர் சொரிந்தனர். பின்பு ரெட்டியாருக்கும் மற்றவருக்கும் தகுந்த சமாதானம் சொல்லி, அப்பெண்ணை ஒரு வண்டியில் ஏற்றித் தமது நண்பர் வீட்டிற் சேர்த்து, அவள் கணவனையும் அங்கு வரவழைத்தார்.

சில நாளைக்குப் பின்பு ரெட்டியார் நெட்டாளத்தில் இருக்க மனமின்றி, தாமும் தமது மனைவியும், ஆறு வயது நிறைந்த தம் மகனோடு கப்பலேறித் தம் ஊர் வந்தடைந்தனர். இவர் தம் ஊர் அடைவதற்கு முன்பே, இவர் தென்னாபிரிக்காவில் தாழ்ந்த வகுப்புப் பெண்ணிற்குச் செய்த உதவி, தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் வெளியாகி, கோபாலபுரத்துச் சாமி ரெட்டியார் வாயிலாக அவ்வூரிலும் பரவியது. "ஐயோ ! தாழ்ந்த சாதிக்காரியைக் கையால் தொட்டதோடு நில்லாமல் சுமந்துவந்து வீட்டிற்குள் வைத்தா சிகிச்சை செய்ய வேண்டும்" என்று அவ்வூரார் பலர் பேசிக்கொண்டனர். அச்சமயம் நமது ரெட்டியாரும் ஊரை யடைந்தனர். ஒரு சிலர் அவரிடஞ் சென்று சுபம் வினவினர். வேறு சிலர் அலட்சிய புத்தியோடு பார்த்தும் பாராதவர்போல் சென்றனர். மற்றுஞ் சிலர் "என்ன, ஐயா! நெட்டாளத்தாரே! நீர் ரெட்டியா, பள்ளனா?" என்று பரிகசித்தனர். அவர்கள் வினவியது ரெட்டியார்க்கு வியப்பு விளைத்தது. "நெடுந்தூரத்தே நிகழ்ந்ததை இவர்கள் எங்ஙனம் அறியக்கூடும்" என்று வியப்புற்றார். "ஐயா! நான் பள்ளன்தான்" என்று புன்சிரிப்போடு பதிலளித்தார் ரெட்டியார். பின்பு தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு சிறிது நிலம் வாங்கிப் பயிர்த் தொழில் செய்துவந்தார். சிறுவன் கோபாலபுரத்தில் ஒரு பள்ளிக்கூடத்திற் சேர்ந்து கல்வி பயின்று வந்தான். அவனுக்கு வயது பதினன்கு ஆகும்பொழுது காந்தியடிகளால் போற்றப்பட்ட நமது ரெட்டியார் உலகவாழ்வு துறந்தார். அவரது மனைவி வீட்டு வேலை செய்தும், வயலிற்குச் சென்று கூலியாட்களிடத்தில் வேலைவாங்கியும், தம்மால் இயன்றன செய்தும் குடும்பத்தை நடத்திவந்தார். ஒருநாள் சிறுவன் "அம்மா! நான் படித்தது போதும்; நீ மட்டும் கஷ்டப்படுவது எனக்குத் துயர் தருகிறது; நானும் பண்ணை வேலை செய்து வருகிறேன். ஓழிந்த நேரத்தில் படித்துக்கொள்வேன்" என்றான். மகன் அறிவையும் தன் கணவன் பிரிவையும் ஒருங்கே நினைத்து கண்ணீர் உதிர்த்து, "தம்பி! எனக்கு ஒன்றும் வருத்தமில்லை; நீ இன்னும் நன்றாகப் படி" என்றாள் அவன் ஆருயிரன்னை. சிறுவன் ஒரே பிடிவாதமாக நிற்பதைக் கண்டு அவளும் ஒத்துக்கொண்டாள். அன்றிருந்து அவன் வயல் வேலையோடு ஒழிந்த நேரத்தில் கல்வி பயின்று, தாயார்க்குச் சிறிது ஓய்வு கொடுத்து வந்தான்.

ஒத்துழையாமை காலத்தில் கோபாலபுரத்தில் ஓர் பொதுக்கூட்டம் நடந்த செய்தி முன்னரே கூறியிருக்கின்றேன். அக்கூட்டத்திற்கு நமது சிறுவனும் சென்றிருந்தான்; அக்கால நிலைமையையும், காந்தியடிகளின் பெருமையையும் தொண்டர்கள் தங்கு தடையின்றிப் பேசுவதைச் சிறுவன் தன்னை மறந்து கேட்டுக்கொண்டிருந்தான். மகாத்மாவைப்பற்றி ஏற்கெனவே தன்

பெற்றோரால் கேள்விப்பட்டிருந்தான் எனினும் அவர் பெருமையை அன்று தான் அறிந்தான். கூட்டம் முடிவுபெற்றதும் சிறுவன் தொண்டர் ஒருவரிடத்திற் சென்று "ஐயா, எனக்கு ஆங்கிலம் தெரியாது; தேசீய விஷயம் தெரிந்து கொள்வதற்குத் தமிழில் எந்தப் பத்திரிகை சிறந்தது?" என்று கேட்டான்.

தொண்டர்:—தம்பி! நீ இந்த ஊர்தானா? காங்கிரசில் ஒரு அங்கத்தினராகச் சேர விருப்பமா?

சிறுவன்:—இப்பொழுது விருப்பமில்லை; வயதிலும் சிறியவன்.

தொண்டர்:—அப்படியானால் சென்னையில் "நவசக்தி" என ஒரு வாரப் பத்திரிகை நடக்கிறது; அது மிகவும் சிறந்தது.

அதன் பின்னர் சிறுவனுக்கு "நவசக்தி" தொடர்ந்து வந்துகொண்டிருந்தது. அதனால் அவன் புதிய சக்தியையும் பெற்று விளங்கினான். அவனது தேசீய வுணர்ச்சிக்கு அப் பத்திரிகைதான் காரணம். சில வருடங்கட்குப் பின்பு நேர்ந்த சில இடையூறுகளால் அப்பத்திரிகை ஒழுங்காக வெளிவர இயலாதுபோகவே சிறுவன் 'ஆனந்தபோதினி" எனும் வாரப் பத்திரிகையை வரவழைக்கத் தொடங்கினான். நமது அன்பர்கள் அச்சிறுவனை இன்னான் என ஒருவாறு ஊகித்திருக்கக்கூடும். அன்று ஆற்று மணலில் ராஜாம்பாளோடு அடிகளின் உண்ணாவிரதத்தைப்பற்றிப் பேசிய இளைஞன் இவனே இவன் பெயர் இராமதாசன். இத் திருப்பெயர் செட்டாளத்தில் காந்தியடிகளால் சூட்டப்பட்டது. எனினும் கோபாலபுரத்தில் இராமன் என்றே அழைத்து வந்தனர்.

* * *

ஐயருக்கும் சாமி ரெட்டிக்கும் உண்ணாவிரதப் பேச்சு நடக்கையில் ஆநந்தக் கூத்தாடிய ராஜாம்பாள் அன்று மாலை இந்நற்செய்தியை இராமதாசனிடம் அறிவிக்க விரும்பி, அவனைச் சந்திப்பதெங்கே என்ற கவலையோடு தனது வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தாள். சாமி ரெட்டிக்குத் தபாற் சேவகன் அன்று காலை 'இந்து''ப் பத்திரிகை கொண்டு சென்றதைக் கண்ட இராமதாசன் "என்ன செய்தி வெளிவருமோ" என்ற திகிலோடு சாமிரெட்டி மாளிகையிருக்கும் வீதியின் கோடியில் இங்கும் அங்குமாக உலாவிக்கொண்டே ராஜாம்பாளை யெதிர்பார்த்து நின்றான். வாசலில் நின்றுகொண்டிருந்த ராஜம் இளைஞனைக் கண்டதும் தாயைக் கண்ட சேயைப்போல் விரைந்து சென்றாள். அவள் வருவதைக் கண்ட இளைஞன் வீதியிடையில் பலர் முன்னிலையில் பேச அஞ்சி ஊருக்கு அருகே இருக்கும் மரச்சோலையை அடைந்தான். அவளும் அக்குறிப்பறிந்து சிறிது மெதுவாகவே சென்று அச் சோலையை அடைந்ததும் இளைஞன், "ராஜம்! என்ன செய்தி? ஆண்டவன் திருவருள் எப்படி?" என்று வினவினன்.

ராஜ:—வெற்றி, வெற்றி. ஆண்டவன் ஏழை பங்காளனல்லவா? எல்லா வகுப்பினரும் ஒன்றுபட்டு அரசாங்கத்திற்கு விண்ணப்பிக்க, அவர்களும் அதையேற்றுத் தனித் தொகுதியை நீக்கிவிட்டனராம். மகாத்மாவின் விரதம் வெற்றி பெற்றது.

இராமதாசன் தன்னை மறந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். சிறிது பொழுது இருவரும் மௌனமாயிருந்தனர். பின்னர் ராஜாம்பாள்—"வயது

சென்ற தங்கள் தாயாரே இன்னும் வீட்டுவேலை செய்து வருவது தங்களுக்குச் சம்மதமாக விருக்கிறதா?" என்று வினவினாள்.

இராம:—எனக்கு அது பெருங் கவலையாகத்தான் இருக்கிறது; எனினும் அவ்வப்பொழுது நாட்டின் துயரங்கள் நினைவு வரும்பொழுது எனது அன்னையின் துயர் மறக்க நேரிடுகின்றது. இந்நிலையில் வேறு ஒருத்தியை மணந்து அவளுக்கும் என் துயரைப் பகிர்ந்து கொடுக்க மனம் ஒப்பவில்லை.

ராஜா:—உங்களைப்போன்ற எண்ணமுடைய ஒருத்தி யிருந்தால்.

இராம:—இருக்கலாம்; எனக்கு உரிமையாக முடியுமா?

ராஜா:—முடியுமென்றே வைத்துக்கொள்வோம்.

இராம:—முடிந்தால் எனது நல்வினை யென்றே மகிழ்வேன்.

ராஜா:—தங்கள் முன்னிலையில் உரையாடும் அடிச்சி தங்கள் இயல்பிற்குப் பொருந்தேனோ? என்று கூறி நாணத்தால தலை குனிந்தாள்.

இராமதாசன் இங்ஙனம் எதிர்பார்க்கவில்லை; பயங்கரமான கனவு கண்டவன்போல் திடுக்கிட்டு "நீ என்னைச் சோதிக்காதே" என்றான்.

ராஜா:—ஒருவர் இயல்பைச் சிறிதுபொழுதில் அறிந்துகொள்ளல் தங்கள் போன்றார்க்கு அரியதன்று; உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று பேசுபவளாக என்னை நீங்கள் நினைப்பது வியப்பைத் தருகிறது.

இராம:—அப்படி நான் கூறியதற்கு என்னை மன்னித்துவிடு; இச்செயலால் துயர் மிகுமென்றே நினைக்கின்றேன்.

ராஜா:—என்னை மணப்பதால் உங்களுக்குத் துயர் மிகுமெனின் என் தீவினையை நொந்துகொள்வதன்றி வேறென் செய்வேன்?

இராம:—எனக்குமட்டுமன்று; என்னினும் நினக்கே துயர்மிகும்; கீழ் வகுப்புப் பெண்ணிற்கு என் தந்தை உதவி செய்தமையால், மற்றவர் இருக்கட்டும், நினது தந்தையே எம்மைப் பெரிதும் பழித்து வருகின்றார். இப்பொழுதும் என்னை எங்கேயாவது நின் தந்தை கண்டால் "அதோ பள்ளி ரெட்டி மகன் போகிறான்" என்று என் காதில் விழும்படி கூறுகிறார். இத்தகைய என்னை மணப்பதாகக் கூறினால், அப்பொழுது உன் வீட்டார் அடையும் மனோ நிலையை என்னால் ஊகிக்கவும் முடியவில்லை. அதோடு மற்றவர்கள் நின்னையும் "பள்ளச்சி" என்று சொல்லினுஞ் சொல்லுவர்.

ராஜா:—சொன்னால் சொல்லட்டும்; தங்கட்கு வரும் துயர்போல் பதின் மடங்கு வரினும் மனந் தளரேன். முழு மனதோடு விடை கொடுங்கள்; இறைவன் அருளை இன்னும் எதிர் பார்ப்போம்.

* * *

சாமிரெட்டியார் வீட்டில் அவர் தாயாரும் மனைவியும் மகளும் பேசிக் கொண்டிருக்கையில் "இதென்ன மோசம்! எங்க ஐயரிடத்தில் படித்தவர்கள் எல்லாம் நல்ல பேர் வாங்கியிருக்க, இந்தப் பெண்ணுக்கு ஏன் இப்படி புத்தி போய்விட்டது; இதற்காகவா இங்கிலீஷும் சங்கீதமும் சொல்லிக் கொடுத்தார்" என்று கூறிக்கொண்டே வேணு ஐயர் மனைவி சுப்பு லட்சுமி வந்தாள். "வாங்கம்மா, வாங்க" என்று வரவேற்றனர் மூதாட்டியும் மீனம்மையும்.

சுப்புலட்சுமி:—எப்பவும் வெளியே போகாத உங்க பேத்தி சில நாட்களாய் அடிக்கடி தனியாக வெளியே போகும்போதே எனக்கு ஒருவிதமாக இருந்தது. பெரிய இடமென்று பேசாமல் இருந்தேன். இப்படி யாகுமென்றால் நானே கண்டித்திருப்பேன்.

"இதற்காகத்தான் சிறுசுலேயே கண்ணாலம் செய்துவிடவேண்டுமென்றேன்; 'பெரியவளாகட்டும், அவளே சொல்லட்டும்' என்றான் என் மகன். இப்பொழுது அவள் சொல்லுகிறபடி செய்துவிடவேண்டியதுதான்" என்று சாமி ரெட்டியாரைக் குறிப்பாகத் திட்டினாள் அவர் தாயார்.

சுப்பு:—ஏழையா யிருந்தாலும் தேவலயே; ஈனஜாதிக்காரனுக்கா வாழ்க்கைப்படுவது? ராஜாம்பாள்! உனக்காக பாலையப்பட்டுபோல எவ்வளவோ பெரிய பணக்காரராத்துப் பிள்ளை யெல்லாம் காத்திருக்கிறார்களே; பணம் வேண்டாமென்றால், நல்ல குலமும் புத்திசாலியுமாகப் பாரேன். உன்னை எவ்வளவோ பிரியமாக வளர்த்த தாய் தந்தையரை இப்படி துக்கத்தில் வீழ்த்தலாமா?

தனது அன்பனைக் குறித்து சுப்புலட்சுமி இழிவாகப் பேசியதைப் பொறாத ராஜாம்பாள் "அம்மா! எந்த முறையில் அவரை ஈனஜாதியென்று கூறுகிறீர்கள்? அவர் தந்தை ஒரு ஏழைப் பெண்ணிற்கு உதவி செய்ததனாலா? இப்பொழுதும் எனது தந்தை போகின்ற ஜில்லாபோர்டு கூட்டத்தில் எல்லா வகுப்பாரும் உயர்வு தாழ்வு இல்லாமல் சமமான ஆசனத்தில்தானே வீற்றிருப்பார்களாம். அதுவுமல்லாமல், அக்கூட்டம் முடிந்தபிறகு சில சமயங்களில் நடக்கும் விருந்தில் பிராமணாள்கூட வேற்றுமை சிறிதுமின்றி ஒன்றாக இருந்துதானே உண்பார்களாம். இதிலெல்லாம் மானம் ஈனம் இல்லையா?

சுப்புலட்சுமிக்கு இச் சொல் சுறுக்கென்று தைத்தது. ரெட்டியாரின் தாயாரைப் பார்த்து, "அம்மா இவள் பேசுகிற துடுக்கைப் பார்த்தாயா? இதெல்லாம் இவள் பேசுகிற பேச்சல்ல; எல்லாம் அந்தப் பயல் சொல்லிக் கொடுத்தவையே" என்று தன் மனத்துயரை வெளியிட்டாள்.

* * *

ஒரு வாரத்திற்குப் பின்னர் இராமதாசனும் ராஜாம்பாளும் தனியே அச் சோலையில் சந்தித்தனர். ராஜாம்பாள் வாடி மெலிந்திருந்தாள். முகத்தில் புன்சிரிப்பில்லை, கூந்தலில் மலர் இல்லை. இராமதாசனும் மிகக் கேவலமாகவே காணப்பட்டான். தன்னால் அவள் என்ன துயர் உறுகின்றாளோ என்ற கவலையே அவன் மெலிவிற்குக் காரணம். அத்துடன் வேறொன்றும் அவன் மனதை வாட்டிவந்தது. அது இன்னதென்று பின்னால் அறிவோம்.

இராம:—அன்பு வடிவே! ஒரு வாரத்தில் உன் உடல் இங்ஙனம் துரும்பு போலாய்விட்டதே; இது கருதித்தான் நான் அப்பொழுதே சொன்னேன்; நீ கேட்காமற் போனாய்.

ராஜா:—குணக்குன்றே! தங்களைக் காட்டிலும் யான் அதிகம் மெலியவில்லையே.

இராம:—நீ அப்படித்தான் சொல்வாய்; நீ இன்னும் எவ்வளவோ துன்பங்களை எதிர்பார்க்க நேரிடும்; ஆதலின் நின் கருத்தை மாற்றிக்கொள்.

ராஜா:—மலையசையினும் மனம் அசையேன்; எவ்வளவு துயர் வரினும் நாம் இருவரும் சேர்ந்து அனுபவிக்கலாம்.

இராம:—நம் இருவரின் மணத்தைக் குறித்து வரும் துயர்மட்டுமல்ல; இது சமயம் மகாத்மா தமது உண்ணா விரதத்தை முடித்துக்கொண்டனராயினும், பிடிவாதமிக்க வைதீகர்களோடு இன்னும் போராட்டத்தை எதிர்பார்த்திருக்கிறார். வறட்டு வைதீகத்திற் சிறந்த மலையாளத்தைச் சார்ந்த குருவாயூர் கண்ணன் கோவிலை அனைவருக்கும் திறந்துவிட வேண்டுமென்று அந் நாட்டார் ஒருவர் உண்ணாவிரதமிருந்தார். அவ்விரதம் மகாத்மாவால் இது சமயம் நிறுத்தப்பட்டுச் சில நாட்கள் வரை வைதிகர்களுக்குத் தவணை கொடுத்திருக்கிறார். அதற்குள் ஒரு நன்முடிவு ஏற்படாவிடின் மீண்டும் நமது பிரபு உண்ணாவிரதம் தொடங்குவாராம். என்ன செய்யலாம்? எனக்கு ஒரு எண்ணம் உதித்துளது. ஏற்கெனவே குருவாயூர் பிரதேசங்களில் நம் நாட்டுத் தியாக மூர்த்திகள் பலர் சென்று வைதிகரின் மனதை மாற்ற முயன்று வருகிறார்கள். இராமபிரான் திருவணை கட்டியகாலத்து, அணில் ஒன்று கடல் நீரிற் குளித்து மணலிற் புரண்டு, அம்மணலைக் கடலில் உகுத்து ஊழியஞ் செய்ததைப் போன்று, யானும் குட நாடு சென்று அத் தியாகமூர்த்திகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றி என்னால் இயன்றன செய்பலாம் என்பதுதான் அவ்வெண்ணம். ஆண்டவன் திருவருள் கூட்டுவிப்பின் நமது மணத்தைக் குறித்துப் பின்னர் பேசிக்கொள்வோம்.

ராஜா:—அங்ஙனமாயின் அப்புனித கைங்கரியத்துக்கு யான் உரிமையாதல் கூடாதோ?

இராம:—அன்பே! இவ்வெண்ணமட்டும் வேண்டாம்; உன்னால் இயலாது.

ராஜா:—இவ்வாறு பேசவேண்டாம்; என்னாலும் முடியும்.

இராம:—நம் கருத்தை யுணராது, உன்னைத் திருட்டுத்தனமாக அழைத்துச் செல்வதற்கே இச் சூழ்ச்சி யென்று பிறர் சொல்வரே?

ராஜா:—சொன்னால் சொல்லட்டும்; இச்சமயத்து நாம் அதைப் பொருட்படுத்துவது முறையல்ல.

இராம:—உண்மைதான்; எனினும், எளியனின் வயது சென்ற தாயார் எனது பிரிவால் வருந்தார்; நான் வேண்டிய கூறிச் செல்வேன்; ஆனால் நின்னை அழைத்துச் செல்வதால் உண்டாகும் பழிச் சொல்லைப் பொறுளே.

ராஜா:—அதற்கு நான் பொறுப்பாளியல்ல ; அந்த வைதிகர்கள்தான் காரணம். எப்பொழுது செல்லலாம்?

இராம:—என் உயிரே! நாளைச் செல்வோம்.

* * *

"இராஜாம்பாள் திருமணம் எப்படி முடிந்தது? இராமதாசனையே மணந்துகொண்டாளா, அல்லது பெற்றோர் வேறு ஒருவனுக்கு மணம்பேச, அவள் அது பொறாது தற்கொலை செய்துகொண்டாளா, அம் மற்றவனையே மணந்துகொண்டாளா என்பதை வரையாமல் மொட்டையாக இருக்கிறதே; கதை முடிவு ஒன்றும் நன்றாக இல்லையே" என்று அன்பர்கள் வினவலாம். நியாயமான கேள்விதான்; கதையாயிருந்தால் எதையாவது ஒன்றைக் கட்டி எழுதி முடித்துவிடலாம்; இது அப்படியல்லவே; உண்மைச் சம்பவமாயிற்றே; இப்பொழுதுகூட இராஜாம்பாளும் இராமதாசனும் தமிழ்நாட்டில் பல விடங்

களில் ஆலயப்பிரவேச சம்பந்தமாகப் பிரசாரம் செய்துகொண்டிருக்கிறார்கள். பொன்னானி தாலூகாவைச் சார்ந்த பல இடங்களில் நமது அன்னை கஸ்தூரி பாய் காந்தி பேசிய கூட்டங்களில் முதலில் கடவுள் வணக்கமும் தீண்டாமை நியாயமற்றதென்பதும் அமைந்த பல இனிய பாக்களைக் கல்லும் உருக இன்னிசையில் பாடியவள் நமது ராஜாம்பாள்தான். எனக்கு உறவினன் அல்லவாயினும் மிக நெருங்கிய நண்பன் இராமதாசன். அவன் திருமண வைபவத்தைக் காணவேண்டும் என்னும் ஆசை, அதனை யறிய முயலும் அன்பர்கள் அவாவினும் மிக்குளது. என் செய்வது? வைதிகர்களின் மனம் மாறும் நிலையில் இல்லையே. ஆலயத்தில் அனைவரும் நுழையும் நன்னாள் அணுகினல்லது அவர்கள் திருமணத்தை எதிர்பார்ப்பது இயலாததொன்றே. ஆண்டவன் அருளை வேண்டி நிற்போம்.

———:(o):———

மனைவி:—"எனக்கு வெட்கமாயிருக்கிறது. யாராவது பார்த்தால் என்னை வீட்டுச் சமையல்காரி என்று எண்ணிக்கொள்ளுவார்கள்"

புருஷன்:—"நீ சமைத்த சமையலைச் சாப்பிட்ட யாரும் அப்படி எண்ணிக்கொள்ளமாட்டார்கள்-பயப்படாதே"




# பிராட்டியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

:(o):

அன்றியும் இம்மையே மறுமைதானும் நல்கினை இசையோடு என்று பிராட்டியார் பாராட்டிய பண்பு ஆழ்ந்தகருத்தமைதி கொண்டிலங்குகின்றது. என்னை? இம்மை என்னும் இவ்வுலக வாழ்வு தீர்ந்து தூலவுடம்புவிட்டு சூக்கும தேகத்தினுடன் அடையப்பெறும் ஒருவித நிலைமையே மறுமையென் றழைக்கப்படுவதாகும். அத்தகைய மறுமையின் பத்தினைத் தூலவுடம்போடு கூடிய இம்மை வாழ்விலேயே எய்தப் பெறுவதென்பது பெரியதோர் வியப்பே யன்றோ? அத்தகைய இயற்கைக் கொவ்வாத பெரும்பேற்றினை நல்கினை என்ற கருத்து அச்செய்யுளில் மிளிர்கின்றது. அதுவும் இசையோடு நல்கினை என்றது பின்னும் பெருமை யுடைத்தாகின்றது.

துர்மரணத்தினால் உயிர் விடுவது பாவமே என்பதைப் பிராட்டியார் உணராமல் இல்லை. தமது துன்பத்தினைச் சகிக்க முடியாமல் இந்நிலைமைக்கு விதியின்றித் துணிந்தனர். அந்தப் பாவத்தினின்றும் தம்மை விடுவித்ததையும் போற்றுகின்றார். தவிர அரக்கன் காவலில் தாம் கற்பைக்காக்கும் கடுந் தவம் இத்தன்மையதென வெளியுலகோர் பின்னர் உணர்வதற்கும் ஈண்டுத் தோன்றிய இவன் தக்கதோர் சான்றாகின்றான். இவன் தமது நாயகரது நம்பிக்கைக்கு உரியவனாகித் தூதுவனாக வந்ததோடு இராஜமுத்திரையையும் அளித்துள்ளான். இவன் உள்ளம் எனது மாசற்ற நிலையை யுணர்ந்து கொண்டதால் இனிப் பழிக்காதாரமான வசையும் தீர்ந்தது. ஆகவே இசை விளங்கியது. படத்தகாத துன்பம் உழந்தாலும் கீர்த்தி குன்றுவதைப் பெண்மைத் தன்மை சகியாது. இதனை மயிர்நீப்பின் வாழாக்கவரிமாவன்னார், உயிர்நீப்பர் மானத்திற் கென்றது உண்மையாகும். மானமும் உயிரும் ஒருங்கு நில்லாத வழி, உயிர்தன்னையே விடுத்துத் தானுறு பொருளாய் மானமே கொள்ளுதல் தக்கார் செயல். அதற்கு ஏற்பவே பிராட்டியார் தமது கேடருங் கற்பினை யுணராமல் உலகம் பழிதூற்றுவது கூடும் என்று கருதியே பழிபட வாழ்வதிலும் உயிர்விடல் சிறந்ததெனக்கொண்டு துணியலானார். இராம

தூதன் வரவினால் அப்பழி மாய்ந்திட இடம்பெற்றது குறித்தே இசையோடு இம்மையு மறுமையும் நல்கினை என்றருளின ரென்க.

இதுபற்றித் தமக்குள் எழுந்த பேருவகையினாலேயே உலக மேழும் எழும் வீவுற்றஞான்றும் இன்றென விருத்தி என்று ஆசி புகல்கின்றார். இன்று எனது பெரும் பழியைத் துடைத்ததில் ஏற்படும் புண்ணியத்தினால் உனக்கு அழியாப்புகழ் உலகம் அழியும் காலத்திலும் அழியாத தொன்றாம். ஆகவே எனது கீர்த்தியைப் போலவே உனது கீர்த்தியும் நிலைபெற்றதாகும் என்னும் குறிப்பே இன்றென விருத்தி என்னும் கருத்தினை யுணர்த்துகின்றது. தவிர செய்யுள் வழக்கும் ஆன்றோர் வழக்கும் இருந்தல் என்ற சொல்லிற்குப் புகழுடம்பினைச் சுட்டுதல் இயல்பாகும். இங்ஙனம் கூறிய தேவியார் அநுமனை நோக்கி வீரன் யாண்டையான் இளவலோடும்? எவ்வழி யெய்திற்றனை? ஆண்டகை அடியேன் செய்கை யார் சொல வறிந்தது? எனப் படிப்படியாக வினவலானார். இவை யனைத்திற்கும் சுருக்கமாக விடையிறுத்த அநுமான் வெகு சாதுர்யமாகப் பிராட்டி அஞ்ஞான்று செய்தவற்றை ஒருவாறு சுட்டியும் சுட்டாமலும்—"இக்குரல் இளவல்கேளா தொழிகென இறைவனிட்டான். மெய்க்குரல் சாபம் பின்னை விளைந்தது விதியின் மெய்ம்மை" எனக் கூறியதாகக் கவி காட்டியிருப்பது அநுமானின் சான்றாண்மையைச் சித்தரிக்கின்றது. தவறு செய்தோர் அந்தப் பிழையின் பயனாகத் துன்பத்தில் நைகின்ற போது அப்பிழையைச் சுட்டிக்காட்டுவது பின்னும் மனத்தைப் புண்படுத்துமாதலின் அறிஞர் அம்முறையைக் கைக்கொள்ளார். அறிஞர்க்கறிஞனாகிய அநுமான் எவ்விதம் பிராட்டியார் மனம் நோகப் பேசுவார். தவிர உத்தம குணங்கட்கோர் உயிர்நிலையாகிய இப்பிராட்டியாரே பிழை செய்தாரெனின் அது விதியின் வன்மையே என்று கொண்டார் என்பதும் பொருந்தும். முன்னம் கண்டபோதே பிராட்டியின் அருந்தவநிலையைக்காண நோற்றிலன் அவன் கமலக்கண்களால் என அநுமான் வியந்ததாகக் கவி கூறி யிருக்கின்றார். ஆகவே பிராட்டியின் பெருங்கற்புடைமையை அநுமான் அவ்விரவில் பலபடியாலும் கண்டுகொண்டார். அத்தகையார் கணவன் கட்டளையை மீறி இளவலை வன்மொழி புகன் றகற்றினர் எனில் அது விதியின் வன்மையே யாகும் எனக் கருதுவதிலும் இழுக்கொன்றில்லை. பின்னர் தேவியார் பிரிவினால் அடைந்த துன்பத்தினைப் பத்தி பத்தியாகச் சுவைகுன்ற விவரியாமலும், சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையிலும்,

"வண்டுறை சாலைவந்தான் நின்றிருவடிவு காணான்
உண்டுயிர் இருந்தான்."

என மிக விநயமாக விண்ணப்பிக்கின்றார். இதனால் இராமன் உணர்விழந்து அவசமாயினன். எனினும் உயிர் உடம்பில் உளது என்று கண்டோர் கூறும் அளவில் இருந்தான் என்பது குறிப்பு.

இத்தகைய பரிதாபகரமான ஸ்திதியில் நாயகன் வருந்தினர் என்பதைப் பிராட்டியார் செவிக்கொண்டதும் ஆற்றாதிரங்குதல் கூடுமாதலின் அந்தக் கவலையை உடனே மாற்றல் அவசிய உபாயமாக வுணர்ந்த அநுமான் அடுத்த தொடர் மொழிபோல,

"தேண்டிநேர் கண்டேன் வாழி தீதிலன் எங்கோன் ஆகம்
பூண்ட மெய்யுயிரே போகப் பொய்யுயிர்போல நின்ற
ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை அழிவுண்டாமோ
ஈண்டுநீ யிருந்தாய் ஆண்டு அங்கு எவ்வுயிர் விடுமிராமன் ?"

அவரது மெய்யான உயிராகிய தாம் இங்கு ஜீவித்திருக்கையில் இராமன் அங்கு விடுவதற்கு வேறு உயிர் எது? அன்றியும் ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை அழிவுண்டாமோ? எனவும் திறம்படக் கூறி ஆற்றினர். இதனால் நித்தியமங்கள ஸ்வரூபியாகிய நீர் இராகவன் உள்ளத்தில் பூரணகலைகளுடன் இடம் பெற்றிருக்கையில் அமங்களமான மரணம் எங்ஙனம் எய்தும் என்பதும் பெறப்படுகின்றது.

அந்த இராமகதையின் தத்துவார்த்தத்தை உணர்த்தவந்த வேறு சில வரலாறுகளில், பிராட்டியாரை இராவணன் அணுகா முன்னமே இராமன் இராவணனை வதம்புரியும் மிருத்யு தேவதையை அழைத்து மாயா சீதையாக நிறுவி ஜனகநந்தனியாகிய உண்மைச் சீதையைத் தனது இருதய கமலத்தில் அரூபியாக வசிக்கும்படி ஸ்வீகரித்தார் எனக் காணப்படுகின்றது. அந்த உண்மைக்கேற்ப மேலேகாட்டிய கவியில் அநுமான் வாசகமாகக் கவிவேந்தர்

வண்டுறை சாலைவந்தான் நின்திருவடிவு காணுன்.

என்றும், ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை எனவும் குறித்திருக்கும் நுட்பம் ஆதரவு செய்கின்றதென்பதும் புலனாகின்றது. இக் கருத்தினைப் பின்வந்த செய்யுளிலும்,

"துன்னிருங்காணும் யாறுமலைகளும் தொடர்ந்து நாடி
இன்னுயிர் இன்றியேகும் இயந்திரப் படிவம் ஒப்பான்..."

என்னும் அடிகளால் கவி விளக்கியுள்ளார். புனலிற் றண்மைபோலும் அக்கினியிற் சூடுபோலவும் பிரிக்க முடியாத அவரது சக்தியாகிய நீர் இங்கிருந்தமையால் சூத்திரப் பதுமைபோல் இராமன் வசம் அற்றவராயினர் என்பது உட் பொருள்.

பின்னர் ஜடாயுவாகிய கழுகரசனால், அரக்கன் கவர்ந்தமையும் சுக்கிரீவ நட்பும், அணிகலக் காட்சியும், வாலிவதமும், சுக்கிரீப பட்டாபிஷேகமும், நாடவிட்டமையீறாக விவரிக்கின்றார்.

இவ்வளவும் கேட்ட நங்கை தலைவன் தனிமைத் துயரங் கேட்டு உள்ளம் கரைந்தும் செய்தி கிடைத்தமைக்கு உவந்தும் ஒரு நிலையற்றவராகி ஐயனே யாவும் பொருந்தும். கடலைக் குறுகிய தோற்றமுடைய நீ கடந்ததாகச் சொல்வது எங்ஙனம்? எனச் சந்தேகித்தவராய் வினவுகின்றார். அது கேட்ட தூதன் விநயமாகவும் பணிவாகவும் தாயே உனது நாயகனின் திருவடிகளைப் பற்றியவர்கள் மாயையாகிற பெரிய கடலையும் எளிதாகக் கடப்பர். அடியேன் இச்சிறிய கருங்கடலைக் கடந்ததோர் வியப்பாமோ? என முதலில் புகன்றனர். பிராட்டியார் அவ்விடையினால் சமாதானம் அடையாதவராய்ப் புன்முறுவல் செய்து தவத்தின் பெருமையினாற் கடந்ததா? சித்தியினாற் செய்ய நேர்ந்ததா? உண்மையை உணர்த்துக என மீட்டும் வினவ, அநுமான் பிராட்டியார் ஐயம் தீருவதற்காகத் தனது விசுவரூபத்தை எடுத்து காட்டினர். அண்ட

முகட்டினை அளாவும் அவரது அவ்வுருவத்தினைக் கண்டு பிராட்டியார் அஞ்சிக் கண் புதைத்துப் போதும் போதும் குறுகுதி குறுகுதி என வேண்டினர். உடனே அநுமான் சுருங்கிப் பழைய குறுகிய வடிவத்துடன் அடிபணிந்தார். ஆனால் பிராட்டியாருக்கு இதுகண்ட பிறகேதான் இராமனுக்கு வெற்றி நிச்சயம் என்பது மனதில் திடப்பட்டது. இதன் முன் கூறிய வரலாறுகளினால் வந்தவன் இராம தூதன் என்பது சந்தேகம் இன்றித் தெளிவாயிற்று. எனினும் அரக்கரது வன்மையும் படைப் பெருக்கும் கண்டு தனது நாயகன் எதிர்த்துவரினும் இளையவனைத் தவிர வேறு துணையில்லாத தன்மைக்காகப் பலவாறெண்ணி எண்ணி இரங்கிய தனக்கு இந்த விசுவரூபம் பெரிய தைரியத்தை யளித்தது. இத்தகைய மதிக்க முடியாத தவவலியுடைய இவனே இராமனுக்குத் துணையாயினன் எனில் இராவணனை இராமன் ஜெயம் பெறுவது நிச்சயம். நானும் என் நாயகனைச் சேர்வது உறுதியென்று தன்னுள் பெரிய நம்பிக்கை கால் கொள்ளப் பெற்றார். இதுகொண்ட பிராட்டியார் அநுமான் ஆற்றலையும் அறிவையும் அடக்கத்தையும் பற்பலவிதமாகப் புகழ்கின்றார். அவைகளுள்,

"ஆழிநெடுங்கை யாண்டகைதன் அருளும் புகழும் அழிவின்றி
ஊழிபலவும் நிலைநிறுத்தற் கொருவனீயே உளையானாய்"

என்பது மொன்று. இராமன் பெரும் புகழினை உலகில் நீடூழி நிலை நிறுத்துவதற்கு நீ ஒருவனே காரணமாகின்றாய் என்று புகன்ற மொழி பத்தினி மொழியாதலின் முழு உண்மையாயிற்று. பின்னர் போர் நிகழ்கையில் ஏற்பட்ட பல இடுக்கண்களும் அநுமான் ஒருவனாலேயே தீர்ந்தன என்பது எவரும் அறிந்ததே. உண்மைச் சேவைக்கே ஓர் இலக்கியமாகிய வாயு புத்திரன் இன்றேல் இராமகதையே சுவைதராதென்பதை கவிச்சக்கிரவர்த்தி பிராட்டியாரின் வாசகத்திலேயே முதல் முதலாக அமைத்துக் காட்டியுள்ளார். மேலும் பிராட்டியார் அநுமானது மதிக்க முடியாத ஆற்றலையும், புத்தி நுட்பத்தினையும், அடக்கத்தினையும் கண்டு வியந்து தன்னாலும் அடக்க முடியாத உணர்ச்சியினால்,

"மாண்டேனெனினும் பழுதன்றே இன்றேமாயச் சிறைநின்றும்
மீண்டேன் என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும் வேரறுத்தேன்
பூண்டேன் எங்கோன் பொலங்கழலும் புகழேயன்றிப் புன்பழியும்
தீண்டேனென்று மனமகிழ்ந்தாள் திருவின் முகத்துத் திருவன்னாள்"

என்று மீட்டு மீட்டும் புகழ்ந்தனர். அது கேட்ட அநுமான் தன் புகழைத் தானே கேட்க நாணினவராய், மறுபடியும் அன்னையை வணங்கி அருந்ததியே, என்னைப்போலும் இராமனுக்கு உண்மைத் தொண்டாற்ற ஆங்கு குழுமியுள்ள வானரர் கடலின் மணலினும் பலராவர். அவர் தம் தொகுதியில் அடியேனும் ஒருவனே. வானரர்களின் தலைவனும் சேனாதிபதியும் இட்ட கட்டளைகளைச் செய்வதே எனது கடமை என சூசிப்பிக்கின்றார். பண்ணை என்றமையினால் போர்ப்படையின் பாகுபாட்டைக் குறிக்கின்றது.

இராமனுக்கு நேராக ஆட்பட்ட அடிமை யானன்று. அவ்வித தகுதிக்குரிய வானர சேனைத் தலைவர் பலர் உண்டு. அவர்கள் இட்ட ஏவலைச் செய்பவர்களுள் யானும் ஒருவன் என்ற பொருளை உள்ளடக்கி,

"வண்ணக் கடலினிடைக் கிடந்த மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற்கரிய படைத்தலைவர் இராமற்கடியார் யான் அவர்தம்
பண்ணைக்கொருவன் எனப்போந்தேன் ஏவக்கடவி பணிசெய்வேன்"

எனக் கூறினர். இதனால் நான் சுதந்தரனுமன்று. கேவலம் ஏவலாளன் எனத் தாழ்த்திப் பிராட்டிக்கு மேலு மேலும் சந்தோஷத்தைக் கோடி மடங்கு பெருக்குகின்றார். இவன் ஒருவன் துணைவலியே இராவணனை வெல்லப் போதுமானதெனக் கருதிய பிராட்டியாருக்கு இவனைக் குற்றேவல் புரிபவனாகக் கொண்டிருக்கும் படைத் தலைவரான வானர வீரர்கள் எண்ண முடியாத பலப்பலர் என்பதைக் கேட்ட பொழுது எத்தகைய மனமகிழ்ச்சி பொங்கியிருக்கும் என்பதை மனதினாலும் எவர் ஊகிக்க முடியும்? தவிர பக்தி மார்க்கத்தில் பக்தனைக் காட்டிலும் பக்தனுடைய பக்தன் விசேஷமான வன். சிஷ்யனிலும் சிஷ்யனுடைய சிஷ்யன் அருமை வாய்ந்தவன். அவ்வாறே புத்திரனிலும் புத்திரனுடைய பத்திரன் அன்புக்குரியவன். இந்நுட்பம் பற்றியே அநுமான் ஈண்டு இராமனுடைய அடியார்ககடியன் தாஸர்க்குத் தாஸன் என்று குறிக்கொண்டு புகன்றுள்ளார்போலும். இவ்வாறு வினவிய பிராட்டியாரை ஈண்டும் கவியரசர் "திருவின முகத்துத் திருவன்னாள்' எனச் சிறப்பிக்கின்றார். எல்லா அவயவங்களும் சுந்தரமாக இலங்குமாயினும் உள்ள நிறையையும் தெள்ளிய அறிவையும் வெளிப்படுத்துவது திருமுகமே யாகும். அத்தகைய பூரணப் பொலிவிற்கே அதிதேவதையாகிய மகா இலக்குமி தேவியின் முகமண்டலத்தில் பிரகாசிக்கும் ஜகன் மோஹனசோபையே இங்கு பிராட்டியாரின் கோமள வடிவமாகின்றதென்பது குறிப்பு. வேறொரு இடத்தில் அதாவது சூர்ப்பநகை வாயிலாகக் கம்பநாட்டாழ்வார் "தேவர்க்கும் அணங்காம் அன்னத் தாமரை இருந்த தையல்சேடியாம் தரமும் அல்லள்" என்று போற்றியிருப்பதும் மூல தேவதையாகிய திருமகளைவிடப் பிராட்டியாரது பேரெழில் பன்மடங்கு மேம்பட்டதென்பதை வலியுறுத்தும் உதாரணங்களாகும். விரோதியாகிய அரக்கியும் நிஷ்காமிய வீரனான மாருதியும் இவ்வாறு பிராட்டியாரது வனப்பை மதிக்க முடியாமல் தயங்கினர் என்பது பின்னும் சிறப்புக்குரியதாகும். இது நிற்க தன்னை மிகவும் தாழ்வுபடுத்திக் கூறிய அநுமான் அவ்வளவோடு அமையாமல் தாயே வானர வீரர்களின் தொகை ஒருவாறு எழுபது வெள்ளம் எனக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. அவைகள் ஒருகை நீர் அள்ளிப்பருகினாலும் இக்கடல் நீர் வற்றிவிடும். இதுகாறும் தேவரீர் இங்கு இருப்பது தெரியாத காரணத்தினால் இலங்கை நிலைகெடாமல் நிற்கின்றது.

இனி நிகழப்போவதைக் காண்பீராக எனச் சேனைத் தலைவர்களின் பெயர்களையும் வகுத்துக் கூறி விடைகோரும் தருணத்தில் புதிய தொரு எண்ணம் அநுமான் எண்ணத்தி லெழுந்தது. அதாவது பிராட்டியார் தன்னை முற்றும் நம்பியது தெரிந்ததால் இங்கு பயங்கரமான அரக்கியர்க் கிடையில் இவர் படும் பரிதாபமான துன்பத்தைப் பார்த்தும் மனம் துணிந்து விட்டுச் செல்வது கொடிதென்பதே தனது ஆற்றலுக்கும் அது ஒளி செய்வதாகாதென்று கருதினர். இதனை பிராட்டியாரிடம் விண்ணப்பிக்கத் துணிந்து தொடக்கத்திலேயே கேட்பீராக. அடிமையின் விண்ணப்பத்தினை மூனிந்தருளல்-கோபிக்காதிருக்கப் பணிகின்றேன் என ஆரம்பிக்கின்றார். இதிலிருந்தே தனது வேட்கை தனக்கு சந்தர்ப்பம் கருதி அவசியமாகத் தோன்றினாலும் கற்பினுக் கணியாகிய பிராட்டியாருக்கு ஒருகால் கோபத்தை எழுப்பக்கூடிய

தாகலாம் என்பது விளங்கியதாகவே கொள்ள வேண்டும். என்றாலும் ஒரு சமயம் இணங்கினால் இராவண வதம் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்னும் அவாவினால் கேட்கவும் துணிந்தார். பிராட்டியார் இசைவதற்காக முதற்கண் இராமனெதிர் நின்னைக் காட்டி அடிதாழ்வேன். இது காண்டி எனவும் இப் பணியை எனக்களிப்பதற்கு இது உசிதமான காலம் என்று சுருக்கமாகவும் விநயமாகவும் குறிப்பிட்டார். பாதகன் சிறையில் பரிதபிக்கும் நிலைமையில் உள்ள இவர் இராம தெரிசனத்தைப் பெறக் கூடிய எதிர்பாராத பெரும்பாக்கியம் கருதியாவது இணங்கக்கூடாதா? என இவர் கருதினர். ஆனால் கற்புடை மடவார் மனநிலையைக் கடவுளரும் உணர்தற் கெளிதோ? ஆதலின் இங்கு அநுமானும் ஊகிப்பதில் தவறிவிட்டவரே யாயினர். தனது கோரிக்கை ஏற்கப்பட்டதா? என்பதை யுணருவதற்கு முன்னதாகவே எனது தோள் நெருங்கிய மயிர்க்குலங்களினால் மிகவும் மெதுவாகவுளது. தாம் அக்கணமே துன்பம் தீர்ந்தவராவீர். தம்மைச் சுமந்து செல்லும் அடியேன் நேராக இராமபிரான் எழுந்தருளியிருக்கும் மலையினிடமே ஒரே பாய்ச்சலாகத் தாவிச் சேர்ப்பேன். இடையில் எங்கும் தாமதிக்க யாட்டேன். இது உறுதி என்றும் புகன்றார். அன்றி நான் எவராலும் இறவாவரம் தந்தையால் பெற்றவன். வெறுங்கை வீணனாகத் திரும்பியேகுவது எனது ஆண்மைக்கே இழிவாகும். இராமனுக்கு அடிமைப்பட்ட நான் அடிமைக்குரிய கடமையைச் செய்ய அநுமதியை அளித்தல் வேண்டும். உனது தேவர் அமுதத்திற்கொப்பாகிய தேவியார் சிறையில்படும் அவதிகளைக் கண்டு இரக்கமின்றிப் பொறுப்பின்றித் திரும்பி வந்தேன் என்று புகல்வது அழகாகுமோ? அருள்வீராக என அடிவணங்கி வேண்டினர்.

(தொடரும்)

# சிறு கதை

## ரயில் பிரயாணம்.



(வி. ரா.)

ஆலை வாயில் அகப்பட்ட கரும்பைப்போல் நசுக்குண்டு—அப்பளம் ஆகி—சட்னி ஆகி-அப்பொழுது தான் சலவை செய்து பெட்டி வைத்த அலங்கார அங்கவஸ்திரம், சட்டை வகையராக்களெல்லாம் உருக்குலைந்து-தாறுமாறாகி-"மணிப்பர்"ஸை எவன் அடித்துக்கொண்டுபோய் விடுகிறானே என்ற காபராவுடன்—அடிபட்டு—மிதிபட்டு—புக்கிங் ஆபீஸ் ஜன்னல் கம்பியைப் பிடித்துச் சர்க்கஸ் வித்தைகள் காட்டி—டிக்கட் வாங்கிக்கொண்டு—வியர்வை யொழுக—தலைவிரி கோலமாய்—வெளியில் முட்டிக்கொண்டு வரும்போது, "ட்ரெயின்" வந்துவிட்டது. (இந்த வாக்கியத்தில் ஏதேனும் இலக்கணப் பிழையிருந்தாலும் தயவுசெய்து வாசகர்கள் மன்னித்துவிட வேண்டும். ஆத்திரத்தில் இலக்கண வரம்பு தட்டுக்கெடுவதை ஏதாவது வழுவமைதியாகப் பாவிக்குமாறு பண்டிதர்களையும் வேண்டுகின்றேன்) ஏன்?—என்னுடைய கஷ்டம் எனக்கல்லவா தெரியும்? அந்தச் சோம்பேறித்தனம் பிடித்த அசட்டு டிக்கட் கலெக்டர் அப்பொழுதுதான் மெதுவாய் வந்து "கேட்"டைத் திறந்தபடியால்—வண்டியைவிட்டு அவசர அவசரமாய் வெளியில் வருகின்றவர்கட்கும், எங்கே வண்டி புறப்பட்டுவிடுகிறதோ என்று அஞ்சி அலறிக்கொண்டு உள்ளே போகின்றவர்கட்கும் நடந்துகொண்டிருந்த கோரமான யுத்தச் சந்தடியில் நுழைந்து, எப்படியோ பிளாட்பாரத்திற்குள் வந்துசேர்ந்துவிட்டேன்.



இனி, வண்டி புறப்பட்டுவிட்டால் என்ன செய்கிறது என்று திக்குமுக்காடித் திணறிப் பக்கத்திலிருந்த பெட்டியைச் சமீபிக்கும்போது உள்ளே இருந்தவைகளெல்லாம்—பஜனை கோஷ்டியில் கோவிந்தநாம சங்கீர்த்தனம் போல்—"இடமில்லை" என்றன. இங்கே ஓடி அங்கே ஓடி அவஸ்தையில் தத்தளித்துக் கொண்டிருந்தபோது கார்டு "விஜில்" அடித்துவிட்டான். இனிமேல் அலைவதில் காரியம் இல்லை என்று முடிவு செய்துகொண்டு அந்தப் பெட்டியிலேயே ஏறிவிடலாம் என்று போனால்—உள்ளே இருந்த ஒருவர் கதவை முழுபலத்துடன் அழுத்தித் தள்ளிக்கொண்டு "இடமில்லை போவோய்" என்றார். வண்டி நகர்ந்து கொண்டிருக்கிறது. வேறு வகை காணா

மல் ஜன்னல் வழியே "சூட்கே"ஸை அவர் கைமீது போட்டேன். அந்தக் கை சற்றே தளர்ந்தது. கதவை அழுத்தித் தள்ளி உள்ளே நுழைந்தேன்.

"நீ மநுஷ்யனு மாடா? இவ்வளவு முரட்டுத்தனமா? விரல் நசுங்கிப் போய்விட்டதே" என்றார்.

"நீ மநுஷனுயிருந்தால் உன்னிடத்தைவிட்டு எழுந்துவந்து கதவைத் தள்ளிக் கொண்டிருப்பாயா?" என்றேன். காரியம் மிஞ்சிப்போகாதபடி நாலுபேரும் நாலு வார்த்தை சொல்லி அடக்கிவிட்டார்கள்.

"நாற்பது பேர் உட்காரலாம்" என்று எழுதியிருந்த பெட்டியில் 73 பேர் புளி மூட்டைகளைப்போல் அடைந்து கிடந்தார்கள். "சூட்கே"ஸை ஒரு பக்கத்தில் வைத்துவிட்டு பெட்டியின் மத்தியில் மிகுந்த நெருக்கடியில் நின்று கொண்டிருந்தேன். நாலாபக்கமும் கண்பார்வையைச் செலுத்தினேன். கதவைத் தள்ளின பேர்வழி என்னை மென்று விழுங்கிடுபவர்போல் சும்மா "முறை"த்துப் பார்த்துக் கொண்டே இருந்தார். பழுத்த வைதிக பிராமணர். அநேகமாய் மதுரைப் பக்கம்போலிருந்தது. அந்தத் தலைக்குடுமி—அங்கவஸ்திரம்—புதர் மூளைத்த முகம்—அவ்வுண்மையை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. ஜன நெருக்கடியில் "கேட்டுத்" தாண்டி வரும்போதே



எனது பார்வை அவர்மீது விழுந்தது. அவரும் என்னை அங்கிருந்தே எதிர் பார்த்துக் கொண்டிருந்திருக்கவேண்டும் என்று எண்ணினேன். இந்த அந்நியோந்நிய ரகஸியம் என்ன என்று மறுபடியும் அவரைத் திரும்பிப் பார்த்தேன். அந்தச் சிறிய பலகையில் நான்கு பேர் உட்காரலாம். ஆனால் பலகை முழுவதையும் படுக்கை விரிப்பு ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. மீதி இடத்தில் தாராளமாய்ச் சப்பளங்கூட்டி உட்கார்ந்து கொண்டிருந்தார் பிராமணர். நான் அவரைக் குறிப்பாய்க் கவனித்ததைக் கண்டு என்னைக் கூர்ந்து பார்த்தார்.

அப்பப்ப! அந்தப் பார்வையில் எவ்வளவு அர்த்த புஷ்டி! பேசும் சினிமாக்களில் பாத்திரங்கள் பேசும் பேச்சுக்களுக்கேற்ற செயல்கள்—திரைகளில்-ஏககாலத்தில் வேகமாய்க் காட்சி அளிப்பதைப் பார்த்திருப்பீர்கள்-இப்படியே அந்தப் பிராமணரின் மனோபாவங்கள் நெற்றியில் தாக்கி முகமுழுவதிலும் "விர் விர்" என்று பாய்ந்து காட்சி அளித்துக்கொண்டிருந்தன. "படுக்கையை எடுக்கச் சொல்லுவாயோ—என்னவோ ஜாக்கிரதை! நீயல்ல—ஹரிஹர பிரமாதிகள் வந்தாலும் என்னிடம் நடக்காது! என் சங்கதி உனக்குத் தெரியாது! கபர்தார்! இளிச்சவாய்ப் பிராமணன் என்று எண்ணிவிடாதே—வேஷத்தைப் பார்த்து. ச்சீ! இதென்ன இங்கே நரகவேதனை!" என்று ஏதேதோ "பிலிம்" சுற்றிக்கொண்டிருந்தது. இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த பெரியவர் ஒருவர் எனக்குக் கொஞ்சம் இடம் கொடுத்து உட்காரச் சொன்னார். அவருக்கு நன்றி சொல்லிக்கொண்டே உட்கார்ந்தேன்.

"ஐரோப்பிய தேசங்களில் ரயில்வேக்காரர் பிரயாணிகளின் சௌகரியங்கட்கு எள்ளளவும் குறைவு நேராமல் ஏற்பாடு செய்கிறார்களாம். அத்தேசங்

களில் உள்ள ஜனங்களுங்கூட எவ்வளவு அவசரமானாலும்—டிக்கட்டுகளின் பொருட்டு ஒருவருக்கு ஒருவர் தொட்டுக்கொள்ளவும் மாட்டார்களாம். இந்தத் தேசமும் அந்தச் சுகத்தை எந்தக் காலத்தில் அநுபவிக்கப்போகிறதோ! பெண்கள் டிக்கட்டு வாங்குவது—பிரயாணம் செய்வது என்றால் எவ்வளவோ தொல்லை—பயம். நமது நாட்டு மக்களும் தங்களுடைய கிரமமான உரிமைகளையும், மற்றவர்களின் உரிமைகளையும் தெரிந்துகொண்டு ஒரு சிறிதும் சுயநலம் பாராட்டாமல்—இந்த நெருக்குதல்களையும், நீசச்செயல்களையும் அடியோடுவிட்டு விட்டு—எப்பொழுது நல்ல ஏற்பாடுகளையும் நடவடிக்கைகளையும் கற்றுக்கொள்ளுவார்களோ" என்று எண்ணிக் கொண்டிருந்தபோது அடுத்த ஸ்டேஷன் வந்தது.

வண்டி நிற்கப்போகும் சந்தர்ப்பத்தில் மறுபடியும் பிராமணர் கை கதவின்மீது விழுந்தது. வெளியிலிருந்த ஜனங்கள் தள்ளுவது, பிராமணர் அழுத்திப்பிடிப்பது—"கதவைத் திற" என்றால் "போ இன்னொரு பெட்டிக்கு" என்பது. "ரயில் உங்கள் அப்பன் வீட்டுதா?" என்றால் 'இல்லை உங்கள் அப்பன் வீட்டுதே" என்பது. "நீ மட்டுந்தானா டிக்கட்டு வாங்கினவன்" என்றால் "ஆ! மஹா வாங்கிவிட்டாய்நீ" என்பது—இவ்வாறு அர்த்தமற்ற வாதங்களை வாய்கிழியச் செய்துகொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் கார்டு "விஜில்" கொடுத்தவுடன் ஜனங்கள் வேறு இடத்திற்குப் பக்ஷிகளாய்ப் பறக்கத் தொடங்கினார்கள். "உங்களுக்கெல்லாம் எவ்வளவு சகாயம் செய்தேன் பாருங்கள்" என்று சொல்லுவதுபோல் அந்தப் பிராமணர் எங்கள் பக்கம் திரும்பி, முகத்தை விசாலப்படுத்திக்கொண்டு "என்" என்று வீரமுழக்கஞ் செய்தார். நாங்கள் யாரும் "ஆமாம்" என்று சொல்லாததைப் பார்த்து, 'நீங்கள் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் வெற்றி எனதே' என்று உடம்பைக் குலுக்கித் தலைக்குடுமியைத் தட்டி முடிபோட்டார். எஞ்சின் இழுக்கத்தொடங்கியபோது பெட்டிகள் முணு முணுக்கொண்டே நகர்வதா வேண்டாமா என்று சந்தேகித்துக்கொண்டிருந்தன. பிராமணர் வெற்றிக் களிப்பில் வீறுகொண்டு விளங்கினார். இதற்குள் யாரோ தடாலெனக் கதவைத் திறந்தது தெரிந்தது. பிராமணர் மிகுந்த ஆண்மையுடன் அங்கே பார்த்தபோது கூந்தல் கத்தரித்துக்கொண்டிருந்த ஒரு பதினெட்டு வயது மடந்தை உள்ளே நுழைந்தாள். பிராமணர் ஏமாந்து தடுமாற்றத்துடன் பார்த்தார். பாவம்! விதவைகள் வழக்கையாக மொட்டை அடித்துக்கொள்ளுவதைச் சாஸ்திரம் என்று அறிவார். இதை விட்டுப் பெண் மயிர் கத்தரித்துக் கொள்ளுவது என்ன? அதுவே திருப்பதி வெங்கடேசுவரரின் பிரசாதமாயிருந்தால் சந்தோஷிக்கக் கூடியவரே. ஆனால் பார்த்தவுடனே கிறிஸ்தவப் பெண் என்று நன்றாய்த் தெரிந்தது. பிராமணர் செய்வது இன்னது என்று தோன்றாமல் தத்தளித்துக் கொண்டிருந்தார். பெட்டிகள் நமது சனாதன தரும சாஸ்திரிகளைப்போல் முணு முணுத்துக்கொண்டு நகரமாட்டோம் என்றாலும், இஞ்சின் காந்தியடிகளைப்போல் பெட்டிகளையெல்லாம் சேர்த்து முன்னும் பின்னும் ஒரு ஆட்டு ஆட்டி முன்னே இழுத்துக்கொண்டு செல்லத் தொடங்கிவிட்டது. அந்தப் பெண்ணுக்குப் பின்னே ஒரு இளைஞனும் நடுத்தர வயதுடைய ஒருவரும் பிரவேசித்தார்கள். வண்டி ஸ்டேஷன் தாண்டி ஜோராகக் கிளம்பியது.

அந்தப் பையனும் பெண்ணும் சாமான்களின் மத்தியில் நின்றுகொண்டிருந்தார்கள். அந்த நெருக்கடியில் அவள் நின்று கொண்டிருந்ததைப்

பார்த்து "அந்த அம்மாளை இங்கே உட்காரச் சொல்லுங்களேன்" என்று நான் எழுந்தேன். "ஐயோ உங்களுக்குச் சிரமம்" என்றார் வந்தவர். பரவா யில்லை; அந்தப் பெட்டிகளின்மேல் உட்காரலாம்" என்று நான் பெட்டி மீது உட்கார்ந்தேன். அவள் எனக்கு வந்தனம் செலுத்திக்கொண்டே என்னிடத்தில் உட்கார்ந்தாள். பிராமணர் எங்கள் சரித்திரத்தைப் பொடபொடப்புடன் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய முகத்தில் மீண்டும் "பிலிம்" சுழல ஆரம்பித்தது. "இவர்களென்ன, உன்னுடைய இனமா ஜனமா? அந்தப்பாழும் மதத்தவர்களுக்கென்ன இவ்வளவு நல்ல வார்த்தை—ஆதரவு. ஆனால் உன்னுடைய பாதி கிறிஸ்தவ வேஷத்திற்கு இந்தப் பாழும் புத்தி தவிர நல்ல புத்தி உதயமாகுமா?" என்று உள்ளுக்குள்ளே புழுங்கிக்கொண்டிருந்தார்- அந்த இளைஞன் என்னைத் தொட்டுக்கொண்டிருந்ததைக் கண்டு.




கிறிஸ்தவ சகோதரன் கையிலிருந்த தினசரி பத்திரிகையை நானும் பார்த்துக்கொண்டிருந்தேன். அகில இந்தியக் கிறிஸ்தவ மகாநாட்டில் தலைவர் செய்த பிரசங்கத்தில் "மதம் ஒவ்வொரு வகுப்புக்கும் வேறு வேறாயிருந்தாலும் நாம் எல்லோரும் பாரத மக்களே, பாரதமாதாவின் விடுதலையின் பொருட்டு நாமெல்லோரும் ஒரு முகமாகக் கலந்து முயற்சி செய்ய வேண்டியவர்களே" என்று குறிப்பிட்டிருந்த செய்தியைப் பற்றிப் பேசத் தொடங்கினோம். இந்தச் சமயத்தில் பிராமணர் திடீரென்று கிளம்பி, இரட்டைக் குழல் துப்பாக்கியில் மருந்து கெட்டிப்பதுபோல் பொடியை மூன்று விரல்களில் எடுத்து இரண்டு மூக்குத் துவாரங்களிலும் வைத்துத் திணித்து உறிஞ்சினர். யுத்தத்திற்குத் தயாராகிறாரோ என்று எண்ணிக் கவனித்தபோது "மஹா சாதித்துவிட்டவர்கள் தான் நீங்கள். உங்கள் சுயராஜ்யமும் நீங்களும் உங்கள் முகமும்" என்று நெற்றி சொல்லிற்று. கிறிஸ்தவ சகோதரன் "யார் எவ்வளவு விட்டுக் கொடுத்துத் தேசாபிமானத்துடன் பாடுபட முன்வந்தாலும், இந்தச் சநாதனிகள் மட்டும் ஒவ்வொரு விஷயத்திலும் முட்டுக்கட்டை போடுகிறார்கள். இவர்களால் விரைவில் தேச விருத்திக்கு இடங்கிடைக்காமல் போய்விடுமோ என்று பயப்பட வேண்டியிருக்கிறது" என்றான். பிராமணர் டுர்ர் என்று மூக்கைச் சீந்தினர்; போர் தொடங்கும் அறிகுறியாக நன்றாய் ஊதி அறை கூவுகிறாரோ என்று எண்ணினேன். ஆனால், எங்களைக் குறுகுறுப்பாகப் பார்த்துவிட்டு, முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு "கலிகாலமாயிருந்தால்தான் என்ன? எனது ப்ராமண்ய சக்தியால் காலச் சக்கரத்தைக் கரகரவென்று திருப்பிவிட மாட்டேனா?" என்பதுபோல் பூணூலைப் பிடித்துக் கிர்ர் என்று உடம்பைச் சுற்றிலும் இழுக்கத் தொடங்கினர். நாங்கள் சிரித்துக்கொண்டே எங்கள் சம்பாஷணையைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந்தோம். பிராமணர் படுக்கையில் சாய்ந்து அரைக்கண் உறக்கத்தில் ஆழ்ந்தார்.

'திண்டுக்கல்' என்று போர்ட்டர் சப்தம் போட்டதைக் கேட்டு, அந்தப் பிராமணர் துள்ளி விழுந்தெழுந்து அங்க வஸ்திரத்தை அரையில் இறுக்கினர்,

அநேகமாய்ப் பழநிக்குச் சுவாமிதரிசனம் செய்ய இறங்கிப் போகிறவர்போலிருக்கிறது என்று எண்ணினேன். ஆனால் உண்மை அது அல்ல—மறுபடியும் பழைய சங்கதிக்கே. முழுபலத்துடன் கதவை அழுத்திப் பிடித்துக்கொண்டார். வெளியிலிருந்தவர்களை உள்ளே வரவிடவில்லை. மீண்டும் அதே கலாட்டா. இரண்டு பெண்களைத் தம்முடன் அழைத்துக்கொண்டு வந்த ஒருவர் "கார்"டை அழைத்து "இவர் எங்களை உள்ளே விடமாட்டேன் என்கிறார்" என்று சொன்னார். 'கார்டு' "டேமிட்! கையை எடு!" என்று சொன்னவுடன், பிராமணர் தம்மிருப்பிடத்திற்குப்போய் உட்கார்ந்துகொண்டு "என்ன செய்து தொலைக்கிறது! டாமிட்டாம்! வாங்குகிற பணத்தையும் வாங்கிக்கொண்டு அதற்குமேல் அதிகப் பிரசங்கித்தனம் வேறே!—என்று ஏதோதோ தமக்குள் முணங்கிக்கொண்டு ஜன்னல் வழியாய் வெளியில் பார்வையைச் செலுத்தினார்.




வந்த மூன்று பேரும் நின்றுகொண்டே வருவதைப் பார்த்த கிறிஸ்தவ நண்பர் சட்டென்று எழுந்து அந்தப் படுக்கையை அப்புறபடுத்தி விட்டு அங்கே உட்காருங்கள் என்றார். பிராமணர் நல்லபாம்பைப்போல் சீறி எழுந்து, மூக்குத் துவாரங்கள் புடைக்க "ஏன் ஓய் உனக்குப் புத்தி இருக்கிறதா? இல்லையா? அந்தப் பரமசண்டாளக் கசுமால இடத்திலா என்படுக்கையைத் தூக்கி எறிவது? மநுஷனாய்ப் பிறந்தால் சுத்தி—சுசி இருக்க வேணும்! உன் ஜாதிப்புத்திதானே உனக்கிருக்கும்?" என்று கூறிக் கொண்டிருக்கும்போது, அக்கிறிஸ்துவ நண்பர் ஷர்ட்டுக் கைகளை மேலேற்றிக் கொண்டு "உனக்குச் சுத்தியும் சுசியும் இருந்தால் எல்லாரும் உட்காரும் வண்டியில் பொடி மூக்குச் சளியைச் சீந்துவாயா? வார்த்தைகளைக் கவனித்து ஜாக்கிரதையாகப் பேசு! இல்லாவிட்டால் மானம் மரியாதை யெல்லாம் கெட்டுப் போகும் தெரியுமா?" என்றார். இதற்கிடையில் ஒரு பெரியவர் "என்ன ஐயரே! பொழுது அஸ்தமானம் இப்படிக் கூச்சல்போட்டுக் கொண்டிருக்கிறாய்—உன் இடத்தில் நீ உட்காராமல் ஜனங்கள் உட்காரும் பலகைமேல் அழுக்குமோழி மாதிரி படுக்கையை விரித்துப் பரப்பிக்கொண்டு அதற்கு மேல் இல்லாத பொல்லாத குதர்க்கங்களையும் பேசத் தொடங்கி விட்டாயே. படுக்கையை அந்த மேல் பலகை மீதல்லவா வைக்கவேணும்" என்றார். "இல்லை பிள்ளைவாள்! நான் கொஞ்சம் ஆசாரம் உள்ளவன்; எல்லாரும் வந்து மேலே விழுந்து முட்டிக்கொள்ளுவார்களே என்று அந்தப் படுக்கையைக் கொஞ்சம்



குறுக்கே வைத்தேன்—அவ்வளவே யொழிய ஒருவர் உட்காரக்கூடா தென்று? ச்சே! ராம! ராம!! அப்படி யொன்றுமில்லை" என்றார். "அவ்வளவு ஆசாரமா யிருந்தால் இந்த ரயில் வண்டிகளில் முடியுமா? எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நமதிஷ்டம் போலவே நடக்குமா?" என்றார் பெரியவர். பிராமணர் எழுந்து முணுமுணுத்துக் கொண்டே படுக்கையை எடுத்து மேல்பலகை மீது வைத்துக் கொண்டிருந்தார். வந்த மூன்று பேரும் பிராமணருக்கு வேண்டிய இடத்தை ஒதுக்கிவிட்டு உட்கார்ந்து கொண்டார்கள். வெகு தீவிரமாய் எல்லாரையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு, மூச்சு விடுகிறவர்கள்கூட யாரும் இல்லை என்பதை அறிந்துகொண்டு—பாவம் முணுமுணுப்பதையும் நிறுத்தி விட்டு உட்கார்ந்தார். கிறிஸ்தவ நண்பர் மேலும் பிராமணரையே பார்த்துக் கொண்டிருந்தார். வண்டி புறப்பட்டது. ஏனோ பிராமணர் உடனே எழுந்து இரண்டு கால்களையும் தூக்கிப் பலகைமீது ஊன்றிக் குத்தவைத்துக் கொண்டார். புதிதாக வந்தவர் "ஐயோ, என் அங்க வஸ்திரத்தை மிதிக்கிறீர்களே-கால்களைக் கீழே போட்டு நன்றாய் உட்காருங்கள் என்றார். "நான் பா-ர்-க்-க-வில்-லை" என்று சொல்லிக்கொண்டே கால்களை இறக்கிக் கடந்த ஸ்டேஷனில் தூக்கிப்பிடித்த வெற்றிக்கொடியை இறக்கினாற்போல் பஞ்சகச்சத்தைச் சுருட்டி மடித்து அடக்கிக்கொண்டு—ஜன்னல் வழியே தலையைக் கீழே தொங்கப் போட்டார்.

# ரசாயன சாஸ்திரம்

(கே. எஸ். கிருஷ்ணன் பி. ஏ.)

நாம் உட்கொள்ளுங் காற்றும் பருகுந் தண்ணீரும் இயற்கையின் பேருதவிகள். இப்பூமண்டலத்தைச் சுற்றிக் காற்றும், தண்ணீரும் இருக்கின்றன. இவ்விரண்டும் பிராணிகளுக்கும் தாவரவர்க்கங்களுக் இன்றியமையாதவை இவைகளின் பெருமையைப் பாராட்டும் வண்ணமே, நம்முன்னோர்கள் இவைகளைக் கடவுளின் அம்சமாகக் கொண்டார்கள். காற்றைப் பிரத்தியட்சப் பிரமமாக உபநிடதங்கள் கூறும். பிரமஞானியாகிய நம்மாழ்வாருக்கு, 'உண்ணுஞ் சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாங் கண்ணன்.' காற்றுந் தண்ணீரும் பிராணிகளின் சுகஜீவியத்திற்கு மிகவும் உபயோகமா யிருப்பதால், இவைகளை நம்முன்னோர்கள் மூலவஸ்துக்கள் என்று கொண்டார்கள். காற்றும் தண்ணீரும் சுகத்தையுங் கொடுக்கும். சுகத்தையுங் கெடுக்கும். காற்று, கெட்ட காற்றுகளையும் விஷக் காற்றுகளையும் போக்கி இடங்களைச் சுத்தமாக்கும். ஆனால் வைசூரி முதலிய தொத்து வியாதிகளைப் பரப்பவும் செய்யும். தண்ணீர் தேகத்திலும், உடைகளிலு முள்ள அசுத்தங்களைப் போக்கும். சீதபேதி, டைபாயிட் காய்ச்சல் முதலிய கொடிய வியாதிகளைக் கொண்டும் விடும்.

பிராணிகளின் சீவியத்திற்குக் காரணமான இவ்விரண்டு வஸ்துக்களையும் ஆராய்ந்து, அவைகளிலிருக்கும் மூலப் பொருள்களை அறியப் பூர்வீக ரசாயன சாஸ்திரிகள் முயன்றார்கள். காற்றில் 5-ல் ஒருபங்கு பிராணவாயு இருக்கின்றது என்று நாம் அறிவோம். அப்பிராணவாயுவே உயிர்களுக்கு உத்ஸாஹத்தைக் கொடுக்கின்றது. அதுவே காற்றில் கரந்திருக்குமானந்த வஸ்து. காற்று முழுதும் பிராணவாயுவாக விருந்தால் என்ன வாகும்? சூரிய வெப்பத்தினால் எல்லாப் பிராணிகளும் தாவரங்களும் எரிந்துபோய் விடும். ஆதலால் எல்லாம்வல்ல இறைவன் பிராணவாயு உடன் 5-ல் 4-பங்கு உப்புவாயுவைக் கலந்திருக்கிறார். அந்த உப்புவாயு (Nitrogen) எரிய உபயோகப்படவில்லை யென்று லவாய்ஸியர் கண்டு பிடித்ததாக நாம் அறியோம். அந்த வாயு பிராணவாயுவின் தீவிர சக்தியைக் குறைத்து உலகத்தைக் காப்பாற்றுகிறது. மேலும் உழுத பூமிக்குள் அந்த வாயு சென்று, தாவர வருக்கங்களின் வேர்களின் மூலம், அவைகளுக்குச் சத்தைக் கொடுத்து வளர்க்கின்றது.

இவ்விரண்டு வாயுக்கள் தவிர, கரியமலவாயுவும் காற்றில் இருக்கின்கின்றது. அக்காற்றை பச்சைஇலைகள் வெய்யில் நேரத்தில் உட்கொண்டு, கரியை யெடுத்துக்கொண்டு பிராணவாயுவை வெளி விடுகின்றன. பிராணிகள் கரியமலவாயுவை வெளி விடுகின்றன. ஆதலாற்றான் வீட்டைச்சுற்றி மரங்கள் இருத்தல் அவசியம். நிழல் கொடுப்பதுமன்றி மரங்கள் காற்றையும்

சுத்தமானதாகச் செய்கின்றன. பிராணிகளும் தாவரங்களும் ஒன்றுக்கொன்று உதவியாக இருக்கின்றன.

காற்றில், இம்மூன்று வாயுக்களும், சிற்சில அசுத்தங்களும் புழுதியும் நீராவியும் இருப்பதாகவே 1892ம் ஆண்டுவரையும் ரஸாயன சாஸ்திரிகள் எண்ணியிருந்தார்கள். அந்த வருஷத்தில் ராலி என்ற ஒரு ஆங்கிலப் பிரபு வாயுக்களின் நிறைகளை மிகவும் நுட்பமாக அளந்து வந்தார். அப்பொழுது காற்றிலிருந்து எடுக்கும் உப்பு வாயுவுக்கும் (Nitrogen) சில்லி உப்பில் (Chili Saltpeter or Sodium Nitrate) இருந்து எடுக்கும் வாயுவுக்கும் நிறையில் வித்தியாசம் கண்டுபிடித்தார். ஆனால் அந்த வித்தியாசம் அதிகமில்லை. 1000-ல் ஒரு பங்குதான் இருந்தது. இருந்தாலும் அவ்வளவு வித்தியாசமிருக்கக் காரணம் யாதாயிருக்கலாம் என்று நேச்சர் (Nature) என்ற சாஸ்திர ஆராய்ச்சிப் பத்திரிகையில் கடித மூலம் கேட்டிருந்தார். அதைக்கண்டு ராம்ஸே (Ramsay) என்ற பெரியார் காற்றை மறுபடியும் ஆராய்ச்சி செய்து பார்த்தார். பிராண வாயு, கரியமல வாயு, நீராவி இவைகளை வெவ்வேறாகப் பிரித்து உப்புக்காற்றைப் பரிசீலனை செய்தார். அதிலிருந்து ஒரு வாயு கிடைத்தது. அதற்கு ஆர்கான் (Argon) என்று பெயர். வேறு வாயுக்கள் இருக்கக்கூடுமென்று மறுபடியும் ஆராய்ச்சி செய்து வந்தார். அப்பொழுது ஹிலியம் (Hilium) என்ற மற்றொரு வாயு கிடைத்தது. மறுபடியும் காற்றைச் சோதித்ததில் நியான் (Neon) கிரிப்டன் (Krypton) ஸெனன் (Xenon)என்று மூன்று வாயுக்கள் கிடைத்தன. இந்த ஐந்து வாயுக்களும் மிகவும் செயலற்றவைகள். மற்றவைகளுடன் சேர்ந்து கலக்க மாட்டா. எரியவும் மாட்டா. இவைகளுக்கு அபூர்வ வாயுக்கள் (Rare Gases) என்று பெயர். அவைகளில் ஹிலியம் மிகவும் இலேசானது. ஜல வாயுவை (Hydrogen)ப்போல் 4-பங்கு நிறைகொண்டது. ஆதலால் ஹிலியமும், ஜலவாயுவும் ஆகாய விமானங்கள் பரக்க உபயோகமாகின்றன. ஆனால் ஜலவாயு ஆபத்திற்கிடமானது. ஏனெனில் காற்றுடன் சம்பந்தப்பட்டு சூடு பற்றிவிட்டால் ஆகாய விமானம் வெடித்துத் தூளாய்ப்போய்விடும். ஹிலியமோவெனில் காற்றுடனே, அல்லது பிராண வாயுவுடனே சம்பந்தப்பட்டுச் சூடுபட்டாலும் ஒன்றும் ஏற்படாது. ஆனால் ஹிலியம் உண்டாக்குவது மிகவும் கடினம். மிகவும் பொருட் செலவு. ஆதலால் ஆகாய விமானங்களுக்கு ஜல வாயுவைத்தான் உபயோகப்படுத்துகிறார்கள். அதனால் சிற்சில சமயங்களில் அபாயங்களும் நேரிட்டுவிடுகின்றன.

காற்றின் பெருமை இவ்வாறாக, தண்ணீரைப்பற்றிப் பகர்வாம். தண்ணீர் என்ற திரவபதார்த்தம் பிராணவாயுவும் ஜலவாயுவும கூடி உண்டாகின்றது. இதைக் கண்டுபிடித்தவர் கேவண்டிஷ் (Cavendish) என்றவர். இந்த இரண்டு வாயுக்களில் ஒன்றான ஜலவாயு, தானே எரியும். பிராண வாயுவோ, எரிச்சலுக்கு உதவி செய்யும். இவ்விரண்டும் ஒன்று சேர்ந்ததினால் நீராவி உண்டாகின்றது. அது குளிர்ந்தால் தண்ணீர் உண்டாகின்றது. அந்தத் தண்ணீரும் அதிகமாகக் குளிர்ந்தால் கட்டியாக உரையும். அந்தப் பனிக்கட்டி தண்ணீரில் மிதக்கும். ஆனால் மிகவும் உறுதியானது. பெரிய கப்பல்களில் மோதி அலைகளை உடைத் தெறிந்துவிடும். பனிக்கட்டி இமயமலையில் ஏராளமாக உரைந்து கிடக்கின்றன. சூரியனைக் கண்ட பனிக்கட்டி போல் என்ற உலக வழக்கத்திற்கிணங்க பனிக்கட்டி உருகிவிடும். அதுதான் சூரியகாந்தக் கல்போலும். அல்லது சந்திரகாந்தக் கல்லுத்தானோ! பனிக்

கட்டி சிற்சில காய்ச்சல்களில் தேகத்துடன் வைத்துக் கட்டப்படுகிறது. இறைச்சி கெட்டுப்போகாமலிருக்கப் பனிக்கட்டியிற்றான் பொதியப்படுகின்றது. கோடைக் காலத்தில் சோடா முதலிய பானீயங்களில் அது போட்டுக் குடிக்கப்படுகின்றது. அது குடிப்பதில் மாத்திரம் நம் நாட்டில் சாதி வித்தியாசம் பாராட்டுவதில்லை!

நீராவியின் செயலோவெனில் மிகவும் அற்புதம். வண்டித் தொடர்களை இழுக்கும். கப்பலை ஓட்டும். சாதி வேற்றுமைகளை ஒழிக்கும். உலகத்திலுள்ளவர்களின் நேசத்தைக் கூட்டும். வியாபாரத்தை அதிகரிக்கச் செய்யும். மேகமாகமாறி மழை பெய்து பஞ்சத்தை யொழிக்கும்.

தண்ணீரோவெனில் ஆகாரத்தைச் சீரணம் செய்யும். இரத்த ஓட்டத்தைச் சரிவர நடத்தும். அசுத்தங்களை யகற்றும். பயிர்களை விருத்தி செய்யும். நதிகளை யலங்கரிக்கும். தன்மேல் கப்பல்களைத் தாங்கும். எல்லா விதமான உணவுகளையும் கொடுத்துத் தானும் உணவாகும்.

காற்றும் தண்ணீரும் சாதிவித்தியாசச் சலுகை காட்டுவதில்லை. எல்லாருக்கும் பொதுவாக இருக்கின்றன. நீந்தத் தெரியாதவனைத் தண்ணீர் தாழ்த்திவிடும். அதில் சாதிவித்தியாசம் பார்ப்பதில்லை. நாம் அவைகளைச் சுத்தமாக வைத்துக் கொண்டால் அவை நமக்குச் சுகத்தைச் செய்யும். நாம் அவைகளைக் கெடுத்தால் அவை நமக்குத் தீங்கை விளைவிக்கும். அவைகள் மிகவும் சுத்தமானவைகள். மனிதன்தான் அவைகளைப் பாழ்படுத்தித் தனக்கும் தன் அயல்வீட்டார்களுக்கும், கேட்டைத் தேடிக்கொள்ளுகிறான். ஆதலால் காற்றையும் தண்ணீரையும் சுத்தமாக வைத்து யாவரும் சமமாக அனுபவித்து இனிது வாழ்வோமாக.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

# பெட்டகக் கதைகள்.

("செம்பியன்".)

(611-ம் பக்கத் தொடர்ச்சி)

2. "மானைப் பிடி யென்று ஜானகி சொல்லிய
வார்த்தைக் கிராமன் தொடர்ந்ததனால்
ஈனமும் துன்பமும் வந்த கதைதனை
என் அறியாயோ சொல் பெட்டகமே"

என்றதில் அடங்கிய இராமர் கதையாவது:—

அயோத்தியை ஆண்டுவந்த சூரிய வமிசத்து அரசர்களில் அசன் புத்திரனாகிய தசரதனுக்கு கௌசலை, கைகேசி, சுமித்திரை என்னும் மூன்று மனைவியர் இருந்தார்கள். இவர்களுக்கு நெடுங்காலம்வரை புத்திரபாக்கியம் இல்லாமல் இருந்தது. அதனால் தசரதன் கலைக்கோட்டு முனிவரால் புத்திரகாமேஷ்டி யாகம் செய்வித்தான். அந்த யாகத்தின் பலனாய் கௌசலையிடத்தில் இராமரும், கைகேசியிடத்தில் பரதனும், சுமித்திரை யிடத்தில் இலக்குமணனும் சத்துருக்நனும் புத்திரராகப் பிறந்தார்கள்.

இவர்கள் பிறந்து வளர்ந்து பாலர்களா யிருக்கும்போது விசுவாமித்திரர் தமது வேள்விக்கு இடையூறு செய்யும் இராக்ஷதர்களைக் கொல்லத் தசரதனிடம் கேட்டு இராமரை இலக்குமணனுடன் அழைத்துப்போனார். இராமர் அவருடன் போய்த் தாடகையை வதைத்து, சுபாகுவைக் கொன்று, அவன் சகோதரனாகிய மாரீசனைக் கடலில் வீழ்த்தி விசுவாமித்திருடைய யாகத்தைப் பூர்த்திசெய்வித்து அகலிகையின் சாபத்தைப் போக்கி மிதிலைக்குச் சென்று ஜனக மகாராஜனிடமிருந்த சிவ வில்லை வளைத்துச் சீதாபிராட்டியாரை மணஞ்செய்து திரும்பிவரும் வழியில் பரசுராமருடைய கர்வத்தை அடக்கி அயோத்திக்கு வந்து சேர்ந்தனர்.

இராமர் அயோத்திக்கு வந்தபிறகு தசரதன் அவருக்குப் பட்டாபிஷேகம் செய்ய முயற்சித்தான். இராமர் சிறு பருவமுடையவரா யிருக்கும்போது மந்தரை என்னும் ஒரு கூனியின் முதுகில் உருண்டையை எய்தார். அதற்காக அந்தக் கூனி அவரிடம் உட்பகைகொண்டிருந்தாள். அந்தப் பகையினால் அவள், இராமருக்குப் பட்டங் கட்டுவதைத் தடுத்து அவரைக் காட்டுக்கனுப்பிக் கைகேசியின் மகனாகிய பரதனுக்குப் பட்டங் கட்டும்படி தந்திரம் செய்யக் கைகேசிக்குத் துர்ப்போதனை செய்தாள். கைகேசி அவ்வாறே தசரதனிடம் தந்திரமாக வாக்குறுதி பெற்றுக்கொண்டு இராமரைக் காட்டிற்கு அனுப்பினாள். இராமர் சீதையுடனும், இலக்குமணனுடனும் காட்டிற்குச் சென்றார். தசரதன் இராமரைப் பிரிந்த சோகத்தால் உயிர்விட்டார்.

காட்டிற்குச் சென்ற இராமர், வழியில் அபசாரம்செய்த காகாசுரனுடைய ஒரு கண்ணைப் போக்கிக் குகனோடு நட்புக்கொண்டு அவனுடைய ஓடத்தில் ஏறிக் கங்கையைக் கடந்து, பாரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் தங்கிப் பிறகு காளிந்தி நதியைக் கடந்து, சித்திரகூட பர்வதம் சேர்ந்து, சண்டதபர் சாபத்தால் பெருச்சாளியாயிருந்த மந்தகேது என்னும் காந்தருவன் குமாரனுடைய சாபத்தைப் போக்கி, அவனைக் குபேரனிடம் சேர்ப்பித்து, அங்கே தங்கியிருந்தான். மாமன் வீட்டுக்குப் போயிருந்த பரதன் திரும்பி அயோத்திக்கு வந்து இராமர் காட்டிற்குப் போனதையும், தந்தை இறந்ததையும் உணர்ந்து பட்டங் கட்டிக்கொள்ள மறுத்துத் தன் தாயாகிய கைகேசியை நிந்தித்து இராமரிடம் வந்து தந்தை இறந்தது கூறி அயோத்திக்கு வரும்படி வேண்ட, அவர் தந்தை இறந்ததற்கு வருந்தி அவருக்குச் செய்யும் கடன்களைச் செய்து, "என்வனவாசத்துக்குத் தாய் கைகேசி ஏற்படுத்திய நாட்களை கழித்துவிட்டே நான் நாட்டிற்கு வருவேன்; நீ போய் இராஜ காரியங்களைக் கவனித்துக் கொண்டிரு" என்று அவனுக்குச் சமாதானம் கூறி அவன் விருப்பத்தின்படி தம்முடைய பாதுகையைக் கொடுத்து அவனை அனுப்பிவிட்டு, விராதன் என்னும் அரக்கனை வதைத்து, சரபங்க ரிஷிக்கு முத்தி அளித்து, தண்டகவனத்தில் இராக்ஷதரால் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்த முனிவர்களுக்கு அபயங் கொடுத்து, சுதீக்ஷண முனிவரைக் கண்டு அவர் தம்முடைய தவத்தைக் கொடுக்கப்பெற்று, அகஸ்தியரைக் கண்டு அவரிடம் விருந்துண்டு விடைபெற்றுக்கொண்டுபோய்ச் சடாயுவைக் கண்டு அவருக்குத் தந்தை இறந்த செய்தி கூறி அவருடைய உதவி பெற்றுப் பஞ்சவடியை அடைந்து, சூர்ப்பனகையைப் பங்கஞ்செய்து, தூஷணன் திரிசிரன் முதலியவர்களைக் கொன்று, கரனை வதைத்துச் சீதையுடனும் இலக்குமணனுடனும் அங்கே பர்ணகசாலை அமைத்து அதில் தங்கியிருந்தார்.

அப்போது இராவணனுடைய ஏவலால் மாரீசன் மாயமானாக வந்து சீதையின்முன் உலாவினான். சீதை அதைத் தனக்குப் பிடித்துத் தரும்படி இராமரிடம் வேண்டினாள். இராமர் அதைப் பிடிக்கச்சென்றார். மாரீசன் ஓட்டங்காட்டி அவரை நெடுந்தூரம் அழைத்துக்கொண்டுபோய்விட்டான். இராமர் அது மாயமானென்று நினைத்து மானாக இருந்த மாரீசன்மீது பாணத்தை ஏவினார். அவன் அந்தப் பாணம்பட்டு, "சீதா லட்சுமணா!" என்று கூவி இலக்குமணனையும் சீதையையும் தனியாகவிட்டுப் பிரியும்படி செய்து விட்டு இறந்துபோனான். அந்தச் சமயம் சீதை தனித்திருந்ததால் இராவணன் வந்து அவளை ஏமாற்றி எடுத்துக்கொண்டுபோனான். சடாயு அவனைக் கண்டு தடுத்தார். அவன் சடாயுவையும் அடித்து வீழ்த்திவிட்டுப் போயினான். இராமரும் இலக்குமணனும் விரைவாகத் திரும்பிவந்து சீதையைக் காணாமல் மிகுந்த துக்கப்பட்டுப் புலம்பினார்கள். பிறகு அவளைத் தேடிப் போனார்கள். வழியில் வீழ்ந்து கிடந்த சடாயுவைக் கண்டு வருந்தி அவரால் இராவணன் சீதையைக் கொண்டுபோனான் என்பதை உணர்ந்தார்கள். சடாயு அந்தச் செய்தியைக் கூறிவிட்டு இறந்துபோனார். இராமர் அவருக்கு ஈமக் கிரியைகளை முடித்தார்.

பிறகு தம்பியுடன் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுக் கவந்தனைக் கொன்று, சபரிக்கு முத்தியளித்து, பம்பா நதிக்கரையை அடைந்து, ஆஞ்சனேயரைக் கண்டு அவர்மூலம் சுக்கிரீவனோடு நட்புக்கொண்டு அவனுக்கு

ஏழு மராமரங்களை ஒரே பாணத்தால் துளைத்துக் காட்டித் துந்துபியின் எலும்பைக் காலாற் றள்ளித் தமது வல்லமையை அறிவித்துச் சுக்கிரீவனைத் துன்பப்படுத்திக்கொண்டிருந்த வாலியை அவன்பொருட்டு வதைத்துச் சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து மழைக்காலம் நீங்கும்வரை பிரச்சிரவண மலையில் இருந்து சுக்கிரீவன் வரத் தாமதித்ததால் இலக்குமணனை ஏவி அவனைப் படைகளுடன் வரச்செய்து சீதையைத் தேடுதற்கு வானரப் படைகளை அனுப்பி, அனுமாரால் சீதை இலங்கையில் இருப்பதை அறிந்து, வருணனை முதுகு கொடுக்கச்செய்து கடலில் அணையைக் கட்டி இலங்கையை அடைந்து, இராவணனிடம் அங்கதனைத் தூதனுப்பிப் பிறகு சண்டை தொடங்கி இராவணனைச் சுற்றத்தோடு அழித்து, விபீஷணனுக்கு இலங்கையைச் சொந்தமாக்கி மகுடாபிஷேகம் செய்து சீதையை அழைத்துக்கொண்டு திரும்பி அயோத்தியை அடைந்து இராஜ்ஜியத்தை ஒப்புக்கொண்டு எல்லோரையும் மகிழ்வித்தார். (தொடரும்.)



# வயிரவர்களின் மகாநாடு

(ஆசிரியர்—வ. பதுமநாப பிள்ளை)

வான நெடுங் கடலிலே அமிர்த கலசம் போன்று திகழ்ந்த பூர்ண சந்திரன், தண்ணிலவின் இன்னொளியால் தனது அமுத கிரணங்களைப் பாரபட்சமின்றி எல்லாவற்றின்மீதும் செலுத்தி அனைத்தையும் பால்மயமாக்கி மகிழ்ந்து சிரித்துக்கொண் டிருந்தான். மண்ணும் பால் வண்ணம்; மரமும் பால் வண்ணம்; மலையும் பால் நிறம்; கடலும் பால் நிறம்; கட்டடமும் பால் நிறம்; எல்லாம் பால்மயமாக விளங்கிக்கொண் டிருந்தன! கண்களுக்கும் கருத்துக்கும் ஒருங்கே பேரின்பமூட்டும் அந்த அற்புத சந்திரிகையின் ஆனந்தத்தை அனுபவிப்பதற்கின்றி, பாரத நாட்டின் தென்கோடி முனையாகிய கன்னியாகுமரி க்ஷேத்திரத்து மக்கள் யாவரும் நித்திரைப் பரத்தைக்கு அடிமைப்பட்டுவிட்டனர். சந்திரனுக்கும் கடலுக்கும் எத்தகைய அன்புதான் இருக்குமோ, அதை மனிதரால் அறிந்து கொள்ள முடியவில்லை! திங்களஞ் செல்வனது வெள்ளி ஒளி தங்கள் மீது பாய்வதால், சொல் கடந்த மகிழ்ச்சி அடையும் கடலலைகள் அமைதியை இழந்து குதூகலம் மிகுந்து ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தன. அவ்வலைகளின் சந்தோஷ ஆரவாரத்திற்குப் போட்டியாக, வேறு சில பிராணிகளும் ஆரவாரம் செய்தன. மனித சஞ்சாரமற்ற அந்நள்ளிரவிலே, அவ்வாறு ஆரவாரம் செய்துகொண்டிருந்த பிராணிகள் எவை என்பதைக் கவனிப்போம்.

அந்த நடுநிசியிலே, மானிடர் அனுபவியாத இன்பத்தை அனுபவித்துக் கொண்டு வீரவாதம் பேசிக்கொண்டிருந்த பிராணிகள் எவையாக இருக்கக் கூடுமென்று எண்ணுகிறீர்கள்? கன்னியாகுமரி காடல்லவாதலின், அப்பிராணிகள் சிங்கங்களோ அல்லது புலிகளோ அல்லது யானைகளோ என்று சந்தேகிப்பதற்கு இடமில்லை. அப்பிராணிகள் வேறு எவையுமல்ல; செந்தமிழ்நாட்டுத் தொண்டர்கள் பலரும் தங்களுக்கு உவமையாகக் கூறிக் கொள்ளும் நமது வீட்டுத் தோழர்கள்தான். இன்னும், நீங்கள் அவர்களை உணர்ந்து கொள்ளவில்லையா? அவர்கள்தான் 'வயிரவ' சாதியினர்! அத்தகைய சாதி ஒன்றிருப்பதாகவே நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? புலவர்கள் அல்லாதவர்களுக்கு அப்பெயர் புதிதாகத் தோன்றினாலும், சிறிது சிந்தித்துப் பார்த்தால் உண்மை விளங்கிவிடும். உங்களில் எவரேனும் காசிக்குப் போயிருக்கிறீர்களா? பேய் பிசாசுகளை அண்டவொட்டாமல் தடுத்துக் காக்கும் ரக்ஷைக் கயிறுகளைக் கட்டிக் கொள்வதற்காக, கங்கையில் தீர்த்தமாடி தட்சிணையுந் தந்து மயிற்பீலிக் கத்தையால் அடியும்பட்டு மகிழும் இடமொன்றிருக்கிறதே அங்குச் சென்றிருக்கிறீர்களா? அப் பாக்கியம் வாய்க்கப் பெறுவிடினும், அதைப்பற்றிக் கேள்விப்பட்டதேனும் உண்டோ? அவ்விடத்தில் கோயில் கொண்டுள்ள வயிர மூர்த்தியின் மகாஜனங்களே கன்னியாகுமரிக் கடற்கரையில் கூடியிருந்தனர்.

அம் மகாநாட்டிற்குக் கனம் பொருந்திய 'சுருள் வாலர்' அவர்கள் (அடடா! அந்த மகாஜனங்களைத் தெரிந்து கொண்டு விட்டீர்களே! போகட்டும்!

அவர்களை இன்னாரென்று தெரிந்துகொள்ளாமலே, இக்கட்டுரையைப் படித்து முடித்துவிட முடியாதல்லவா?) வரவேற்புக் கழகத் தலைவராகவும், கனம் 'லில்லி' அவர்கள் அக்கிராசனாதிபதியாகவும் விளங்கினர். மனிதர் மகாநாட்டிலே, நீங்கள் வெள்ளையர்களையும் கரியர்களையுந்தான் காணக்கூடும். இந்த வயிரவர்கள் மகாநாட்டிலோ பல வகைப்பட்ட நிறங்களுடையவர்களை மாத்திர மல்ல—ஒரே உடலில் இரண்டு மூன்று நிறங்களுடைய விநோதர்களும் நிரம்பியிருந்தனர். 'நாகரிகம்' என்பது மனிதர்களுக்கு மட்டுந்தான் உண்டு என்று பெருமையடித்துக் கொள்பவர்கள், அங்குக் கூடியிருந்த வயிரவர்களைப் பார்த்துவிட்டால் தலைகுனிய வேண்டியதுதான்! ஆங்கிலேயர்கள் தங்களுடன் கொண்டுவந்து நமக்குக் கற்பித்த பலவகைப்பட்ட 'நாகரிகப் பழக்கங்க'ளில், நாய் (போகட்டும், எவ்விதமும் உங்களுக்கு வெளிப்படையாகத் தெரிவித்தே தீரவேண்டியதுதானே!) வளர்ப்பும் ஒரு முக்கிய ஸ்தானத்திற்கு உரியதே யல்லவா? வளர்ப்பில் மட்டுமோ? ஜாதி தினுசுகளிலும் பெயர் வகைகளிலுங் கூடத்தான் 'நாகரிகம்' இந்நாட்டில் இறக்குமதியாகி யிருக்கிறது! 'ஸ்பானியல்' 'டேரியர்' 'புல்' எத்தனை எத்தனை ஜாதிகள்! 'ரோஸ்' 'லில்லி' 'டாம்' 'ஜான்' எத்தனை எத்தனை நாகரிகப் பெயர்கள்!!



நாகரிகர்களும் கர்நாடகர்களும் ஓரிடத்தில் கூடிப் பேசுவது, மனித சமூகத்தில் அரிதாக இருக்கலாம். சாதி ஏற்றத் தாழ்வை மானிடர்கள் பாராட்டக் கூடும். அப் பேத புத்தி செய்ந்நன்றி குன்றாத சீரிய சாதியினராகிய 'வயிரவ ஜனங்க'ளுக்கும் ஏற்பட்டுவிடவேண்டுமோ? சுருங்கக் கூறின், செல்வச் சீமாட்டியின் மடியில் அமர்ந்துகொண்டு பல்வகைய உயர்ந்த உணவுகளையும் உண்டு—அவ்வம்மையோடு பட்டு மெத்தையில் படுத்துறங்கும் பாக்கியம் பெற்ற நாய்முதல்—எச்சில் இலையை எதிர்பார்த்துக்கொண்டு பொழுது முழுவதும் வீட்டுத் தோட்டத்துச் சாக்கடைக்கருகில் நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு படுத்துக் கிடக்கும் நாய்வரையில்—எல்லா வகைப்பட்ட நாய்களின் பிரதிநிதிகளும் அவ்விடத்தில் கூடியிருந்தனர்.



வரவேற்புக் கழகத் தலைவரான கனம் பொருந்திய 'சுருள் வாலர்' அவர்கள், சிறிது உயர்ந்திருந்தாத ஒரு மேட்டில் ஏறி நின்றார். ஆட்டுவதால் சந்தோஷத்தைக் காட்டக்கூடிய வாலை அவற்றிற்குப் படைத்த கடவுள், கரகோஷம் செய்து களிப்பை வெளிப்படுத்தக் கூடியவாறு கைகளை அமைக்கவில்லையே என்று எனக்கு மிகுந்த வருத்தமாக இருந்தது. 'கண்ணைக் குத்திய தெய்வம் கைக்கழியைக் கொடுத்தது' என்பார்கள். கரகோஷம் செய்வதற்கில்லாத குறையை, அப்பிரதிநிதிகள் தங்களது 'ளொள்' 'ளொள்' என்னும் தனிப்பட்ட கோஷத்தினால் நீக்கிக் கொண்டு விட்டனர். கனம் சுருள்வாலர் தமது பிரசங்கத்தை தொடங்கலானார்:—(குலைக்கிற நாயாவது பிரசங்கம் செய்வதாவது' என்பீர்களோ? 'பாஷை என்று ஒன்று இல்லாமல் எவரும்—எவையும்—கலந்து உறவாட முடியாது' என்னும் உண்மைத் தத்துவத்தை மறந்துவிடாதீர்கள். வயிரவர்களின் பாஷையைக் கற்பிக்கக்கூடிய ஆசிரியர் உங்களுக்குக் கிடைக்காவிட்டால், நாயினம் பேசுவதேயில்லை என்று நீங்கள் தீர்மானித்து விடுவதோ? இனி அவர் நிகழ்த்திய சொற்பொழிவைக் கவனியுங்கள்.)

"சகோதரிகாள்! சகோதரர்காள்!! நீங்கள் எல்லோரும் இவ்விடதில் கூடியிருப்பதைப் பார்க்கும்போது, மகாராஜாவின் எச்சில்இலை கிடைத்து விட்டது போல, எனக்குப் பரமானந்தமாக இருக்கின்றது. பட்டு மெத்தையிற் படுத்துறங்குவோரும் குப்பைமேட்டிற் படுத்துறங்குவோரும் ஒரே இடத்தில் கூடியிருப்பதைப் பார்க்குமிடத்து, நம்மினத்தினரின் விமோசன காலம் சமீபத்திலேயே இருக்கிறது என்பது நன்கு புலனாகின்றது. ஏழைகளை மறந்தும் கண்ணெடுத்துப் பாராத பணக்கார மனிதர்களைப் போலன்றி, எளியவாழ்வு வாழும் ஏழைச் சகோதரர்களிடம் அநுதாபங்கொண்டு உயர்ந்த அந்தஸ்திலுள்ள சகோதரர்கள் பலர் இங்கு விஜயம் செய்திருப்பது எனக்குப் பெருமகிழ் வூட்டுகிறது. இதிலிருந்தே நம்மினத்தவரில் தாழ்ந்த—இல்லை—தாழ்த்தப்பட்டவர்களிடம் உயர்ந்த பதவியிலுள்ளவர்களுக்கு அன்பு இல்லாமற் போய்விடவில்லை என்பது நன்கு தெளிவாகின்றது. அவர்கள் அத்தகைய அன்பை எளியவர்கள் மேல் கொள்ளச்செய்வித்தற்காகக் கருணைவள்ளலாகிய கடவுளை எல்லோரும் போற்றுவோமாக.



சகோதரிகளே! சகோதரர்களே!! இம்மகாநாடு இன்று இங்குக் கூட்டப்பட்டிருப்பதன் நோக்கம், இங்கு விஜயம் செய்திருக்கும் பிரதிநிதிகள் அனைவருக்கும் தெரிந்ததே. நம்மினத்தினர் எல்லோரும் எவ்விடத்தில்—எந்நிலைமையில் இருந்தாலும் நாம் அனைவரும் 'ஒரே இனத்தினர்' என்ற உணர்ச்சியை மட்டும் இழந்து விடக் கூடாது. நமது சமூகத்தின் பொதுநலத்திற்கு உரிய பணிகளைத் தீர்மானிக்கவே நாம் இன்று இங்குக் கூடியுள்ளோம். உயர்ந்த

அந்தஸ்திலுள்ள சகோதரர்கள் பலரும் கலந்து கொண்டிருக்கும் இம் மகாநாட்டிற்கு, ஆதரிப்பாரற்றுத் தெருவில் அலைந்து திரியும் எளியநிலையி லுள்ள என்னை வரவேற்புக் கழகத்தலைவனுகத் தெரிந்தெடுத்ததிலிருந்தே, மனித சமூகத்தில் நடப்பதுபோல் உயர்ந்த அந்தஸ்திலுள்ளவர்கள் தாழ்ந்த நிலையிலுள்ள எளியவர்களை அவமதிக்கத் துணிந்து விடவில்லை என்னும் உண்மை இனிது புலனுகின்றது. இத்தகைய சமரச மனப்பான்மையை எப் பொழுதும் காட்டி வருமாறு இங்கு விஜயம் செய்துள்ள கனவான்களைப் பெரிதும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

மனித சமூகத்தில், இதுகாறும் நீதியற்ற சாதிச்செருக்குடைய கொடிய வர்களால் 'நீசர்கள்' என்றும் 'சண்டாளர்கள்' என்றும் 'தீண்டத்தகாதவர் கள்' என்றும் பெரிதும் இழிவுபடுத்தப்பட்டு வந்துள்ள எளியவர்களுக்கு விமோசனகாலம் தோன்றி விட்டது. பாரதநாட்டை உய்விக்க உதித்த கர்ம வீராகிய காந்தியடிகளது திருவுள்ளத்தில் ஒடுக்கப்பட்ட எளிய வகுப்பின ரிடம் தோன்றிய பேரன்பின் ஒளி, இன்று இப்பாரத நாடெங்கணும் வீசு கிறது. எவ்வளவோ குருட்டுப் பிடிவாதம் கொண்டிருந்தவர்கள் பலரும், பெரிதும் வியக்கத் தக்கவாறு மனம் மாறிவிட்டனர். 'தீண்டத்தகாதவர்கள்' என்று ஒதுக்கப்பட்டு ஒடுக்கப்பட்டவர்களான எளியவர்களிடம், ஆத்ம பரி சுத்தத்தை முன்னிட்டும் நாட்டின் முன்னேற்றத்தின் பொருட்டும் இனி யேனும் அன்பு காட்டியே தீரவேண்டும் என்பதை பரமவைதிகர்கள் உட்பட மிகப் பெரும்பான்மையோர் ஒப்புக்கொண்டு விட்டனர். இனி, சிற்சில வரு ஷங்களுக்குள்ளாக மனித சமூகத்தில் 'தீண்டத் தகாதவர்கள்' என்று எளிய மக்களை வெருட்டி ஓட்டும் கொடுமை இருந்தவிடந் தெரியாமல் மறைந்து விடப் போவதென்னவோ பரமநிச்சயமாகி விட்டது. 'சண்டாளத் தன்மை' என்பது பூமியில் பிறக்கும்போதே உடலோடு ஒட்டிக்கொண்டு விடவில்லை என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டே தீரவேண்டிய காலம் வந்து விட்டது. மனித சமூகத்தில் 'தீண்டத் தகாதவர்கள்' என்று ஒதுக்கப்பட்டுப் பலவகைப்பட்ட துன்பங்களுக்கும் உட்படுத்தப்பட்ட எளியவர்களுக்கு விமோசனகாலம் பிறந்து விட்டது. ஆனல், மிருக சமூகத்தில் 'தீண்டத் தகாதவர்களாக' ஒதுக்கப்பட்டு இன்றளவும் பற்பலராலும் இழிவுபடுத்தப்பட்டு வரும் நம்மினத்தினர்களுக்கு எப்பொழுதுதான் விமோசனகாலம் பிறக்குமோ?

இதுகாறும் ஒதுக்கப்பட்டு, பலவகைப்பட்ட துன்பங்களுக்கும் உட் படுத் தப்பட்டு வந்த எளிய சகோதரர்கள், தங்களுக்கு விமோசன காலம் பிறந்து விட்டது என்ற சந்தோஷத்திஞல், அவர்களை அடுத்து வாழும் நம்மினத்தின ரையே முற்றிலும் மறந்து விட்டார்கள்போ லிருக்கிறது! ஏழை பங்காளனை இறைவனது இன்னருளால் அவர்களுக்குக் கிடைத்துள்ள விடுதலை யின் பத்தை, நம்மை விட்டுவிட்டு அவர்கள் மட்டுமே அனுபவிக்க எண்ணிக் கொண்டு விட்டார்கள் போலும்! மனித உடல்மட்டும் கொண்டுவிட்டால், எவருக்கும் இப்படித்தான் 'நன்றியறிவு' என்பதே இல்லாமற் போய் விடு கிறது! அவர்களைக் குறைகூறி ஆவதென்ன? 'தன் கையே தனக்கு உதவி' என்பது சத்தியப் பழமொழி. நம்மினத்தவர்களுள் எல்லோரும் ஒருங்கே ஒற் றுமை மட்டும் கொண்டுவிட்டால், நமக்கு விமோசன காலம் விரைவில் பிறப் பது பரமநிச்சயமாகும். ஆதலால், மானிடர்கள் நமக்கு உரிய நன்மதிப்பை இனியேனும் தகுந்தவாறு அளித்து நம்மை கௌரவித்து நடத்துமாறு செய்

விக்கக்கூடிய சிறந்த தீர்மானங்களைச் செய்வதோடு, அவற்றை விரைவில் செயலளவில் நிறைவேற்ற முயல்வதற்குத் துணை புரியுமாறு இரங்கியருளும் இறைவனை எல்லோரும் பிரார்த்திக்கக் கடவோம்"—என்று தனது பிரசங்கத்தை முடித்துக்கொண்டு உட்கார்ந்து கொண்டுவிட்டது.

பின்னர், அக்கிராசனாதிபதியாக கம்பீரத் தோற்றமுடையவராய் வீற்றிருந்த கனம் 'வில்லி' அவர்கள் எழுந்தார். உடனே சபையிலுள்ள பிரதிநிதிகள் அனைவரும் தத்தம் வாலாட்டத்தாலும் 'ளொள், ளொள்' கோஷத்தாலும் தங்களது சந்தோஷத்தை வெளிப்படுத்தினர். அக்கிராசனர் முன்னுரையாகச் சில உபசார வார்த்தைகள் சொல்லிவிட்டு தூரப் பிரயாணத்தால் தமது உடல்நலம் குன்றியிருக்கிறது என்றும் பிரசங்கத்தை அந்தரங்கக் காரியதரிசி வாசிப்பார் என்றும் சொல்லி உட்கார்ந்தார். அந்தப் பிரசங்கத்தின் சாரமாவது:—

"சகோதரிகளே! சகோதரர்களே!! உங்கள் எல்லோருக்கும் எனது அன்பார்ந்த வந்தனங்களைச் செலுத்துகிறேன். உங்களிற் பெரும்பாலோர் எனது பெயரைக்கொண்டும் என் தோற்றத்தைக் கண்டும் என்னை ஒரு நவீன நாகரிகப் பித்தனாக நினைத்துக்கொண்டுவிடக்கூடும். ஆனால் அத்தகைய பித்து எனக்கு இல்லையென்பதை, நீங்கள் எனக்கு அளித்த அக்கிராசனப் பதவிக்கு நான் சிறிதும் தகுதியற்றவனா யிருந்தும்—சமூக சேவையில் கொண்டுள்ள ஆர்வத்தின் பயனாக உங்களது கட்டளையை சிரமேற்கொண்டதனாலேயே தெரிந்துகொள்ளலாம். நான் பிறந்ததும் இத்தமிழ் நாட்டிலேயே; வளர்ந்ததும் இத்தமிழ் நாட்டிலேயே; இன்புற்றிருப்பதும் தமிழர் வீட்டிலேயே.



மனிதர் என்னை எப்பெயரிட்டு அழைப்பினும், செந்தமிழ் நாடே எனது தாய்த்திருநாடு. இந்நாட்டிலுள்ள நமது சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் எனது சகோதரரேயாவர். நேற்றுவரையில் சோப் தேய்த்துக்கொண்டு குளிப்பதிலும் நாவுக்கினிய சிற்றுண்டிகளைத் தின்பதிலும் பட்டு மெத்தையிற் படுப்பதிலும் செல்வச் சீமாட்டிகள் மடியில் விளையாடுவதிலுமே இன்பம் இருப்பதாக நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால், இன்றோ எனது இனத்தினரிடையில் கூடிக் குலவும் வாழ்வின் இன்பத்திற்கு, மாளிகை வாழ்வின் இன்பம் எத்தனையோ மடங்கு தாழ்ந்ததாகும் என்பதை உணர்ந்து கொண்டுவிட்டேன். எலும்புக் கூடுகளே போலத் தோன்றும் எளிய சகோதரர்கள் பற்பலரை இங்கே காண்கிறேன். அந்தோ! இத்தகைய எனது சகோதரர்களைக் கண்ணாரக் கண்டபின்னும், கேவலம் சுயநலம் ஒன்றையே குறிக்கொண்டு இனியும் மாளிகை வாழ்வில் நாட்டங்கொள்வேனாயின், மனிதர்கள் நம்மை இழிவுபடுத்தும் இழிமொழிக்கு உண்மையிலேயே இலக்கியமாவேன். கழிந்த காலத்திற்குப் பெரிதும் இரக்கங்கொண்டு நிற்

கும் என்னை, இதுவரை உங்களோடு ஒத்துழையாததற்கு மன்னித்துவிடுங்கள். இனி உங்களுக்குச் சேவை செய்வதே எனக்குப் பேரின்பம் விளைவிப்பதாகும்.

சகோதரிகளே! சகோதரர்களே!! நம் இனத்தவரின் பழம்பெயராகிய 'நாய்' என்னும் சொல்லை, மானிடர்கள் கேவலம் வசைமொழியாக வழங்கி வருகின்றனர். என்னே மனிதர் அறியாமை இருந்தவாறு! சண்டாளத் தன்மையுடைய 'கோபம்' என்னும் கொடும் பேயும் பகுத்துணர்வை மறைத்துவிடும் 'அகங்காரம்' எனும் பெரும் பூதமும், நம்மிடமுள்ள நற்குணங்களை மனிதர் சிந்தித்து உணர்ந்துகொள்ளாதபடி அவர்களது அறிவை மறைத்துவிடுகின்றன. மிருக இனத்தினர்களுக்குள்ளாக, நம்மவர்க்கே உரிய தனிப்பெருஞ் சிறப்பியல்பாக இறைவன் தந்துள்ள அருங்குணங்களைச் சிறிதேனும் நினைத்துப் பார்ப்பார்களானால், மனிதர்கள் நமது இனப்பெயரை வசைமொழியாகப் பயன்படுத்தத் துணிவார்களோ? செந்தமிழ் நாட்டில் சிறந்து விளங்கிய பேரன்பர்கள் பலரும் தங்களை 'நாயனையேன்' என்றும் 'அடி நாயேன்' என்றும் கூறிக்கொண்டிருக்கிறார்களேயன்றி, 'குதிரையனையேன்' என்றேனும் 'ஆனையனையேன்' 'பசுவனையேன்' என்றேனும் எவரேனும் எப்பாடலிலேனும் கூறிக்கொண்டிருக்கிறார்களா?

அன்புடன் தன்னை அடுத்தோரிடம்—தன்னையே நம்பி வாழ்பவர்களிடம் அகம் இரங்கி அருள் செய்து ஆட்கொண்டு ஆதரிக்கும் கருணையாளனாகிய இறைவன், அவ்வன்பர்களைப் பலவகைப்பட்ட சோதனைகளுக்கு உட்படுத்தினாலும்—பகவத்-பக்தியில் கொண்ட உறுதியில் சிறிதளவும் தளராது அவ்விறைவன் ஒருவனையே தஞ்சமாகக் கொண்டு வாழ்வது மெய்யன்பர் இயல்பன்றோ! அவ்வன்பர்களைப் போலவே நம்மினத்தவர்களிற்பலர் தங்களுக்கு எச்சில் இலை எறியும் வீட்டுக்காரனிடமும் அன்புகொண்டு, துரத்தியடித்தாலும் அவனிடம் கொண்டுவிட்ட அன்பில் குறையாது—இரவும் பகலும் அவனது தோட்டத்திலேயே காத்துக்கிடக்கிறார்கள். மன்னுயிரைக் காப்பதை முன்னிட்டு தங்களது இன்னுயிரைப் பலி கொடுக்கவும் பின்னடையாத வீரத்தியாகத்திற்குத் துணிந்து நிற்பவர்கள் மெய்யன்பர்கள். அவ்வாறே வேட்டைக்குக் கூட்டிச் செல்லப்படும் நம் இனத்தைச் சேர்ந்த வீரர்கள், தங்களது எஜமானன் புலிகளின்மேல் பாயுமாறு தங்களை ஏவினும்—தங்களது உயிரைச் சிறிதும் பொருட்படுத்தாது—அச்சமின்றிப் பாயத் துணியும் அஞ்சா நெஞ்சு படைத்த ஆத்மத்தியாகிகள் ஆவர்.

மேலும், பகவத் கீதையிலே—கண்ணபிரான் என்ன சொல்கிறார் தெரியுமோ? "வித்யா விநய ஸம்பந்நே ப்ராமேண கவிஹஸ்திநி! சுநிசைவ ஸ்வபாகேச பண்டிதா ஸமதர்சன:"—("கல்வியிலும் வினயத்திலும் சிறந்த அந்தணன் என்ன, பசு என்ன, யானை என்ன, நாய் என்ன, சண்டாளன் என்ன இவர்கள் அனைவரிடத்திலும் பிரமத்தை சமமாகக் காண்பவனே பண்டிதன் என்று சொல்லப்படுகிறான்.") என்னும் கண்ணபிரானது உரையின் உண்மையை உணர்ந்தவர்கள், நம்மினத்தினரைக் கேவலப்படுத்த துணிவு கொள்வார்களோ? "பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய—சுருக்கத்து வேண்டும் உயர்வு"—என்றார் நாயனார். அவ்வறவுரையை நெஞ்சில்கொண்டு நம்மினத்தினர் தாழ்ந்து பணிந்து சென்றால், நம்மைக் கேவலப்படுத்தும் மானிடர்களது அறியாமையை என்னென்பது?

மேலும், 'எச்சில் இலையைத் தேடித்திரியும் இழிகுணத்தினர்' என்று நம்மை மனிதர்கள் கேவலப்படுத்துகின்றனர். "வாய்க்கும் குருகைத் திரு வீதி எச்சிலை வாரி உண்ட—நாய்க்கும் பரம பதம் அளித்தாய்!"—என்று ஓரன்பர் பொறாமைப்பட்டுக் கூறுமாறு, எச்சில் இலை தின்று பெறற்கரிய பேறுபெற்ற ஒருவரும் நமது முன்னோரில் இருந்தாரென்பதை மனிதர்களே ஒப்புக்கொள்ளுகின்றார்களன்றோ! ஆயுட்காலம் முழுவதும் எச்சில் இலை உண்டே காலங் கழிக்க நேர்ந்த துர்ப்பாக்கியர்களுக்கு, என்றேனும் ஒரு நாள் சுத்த சத்துவ பக்த சிரோமணியின் உச்சிஷ்டம் கிடைத்தாலும் கிடைக்கலாமல்லவா? அத்தகைய புனித சேடம் மட்டும் கிடைத்துவிட்டால், ஜன்ம ஸாபல்யம் பெற்றுவிடலாமல்லவா? எச்சில் இலை தின்பது இழிவென்றால், கணவன் உண்ட எச்சில் இலையில் மனைவி ஏன் சாப்பிட மனங் கொள்கிறாள்? மாடு தின்பதால்—தின்ன நினைத்தாலுங்கூட புலைத்தன்மை உண்டாகிவிடு கிறதென்று தாழ்த்தப்பட்ட எளிய ஜனங்களைத் தூற்றும் மனிதர்கள், அதைத் தின்று தீரவேண்டிய நிர்ப்பந்தக் கொடுமையும் பழக்கக் கொடுமை யும் பசியின் கொடுமையும் அவ்வெளியவர்களுக்கு ஏற்படுவதைச் சிறிதேனும் நினைத்துப் பார்க்கிறார்களா? அவ்வாறே, எச்சில் இலையைத் தின்பதால் நம் மினத்தினருக்கு சண்டாளத்தன்மை உண்டாயிருக்கிறது என்று கூறும் மனி தர்கள், நமது வயிற்றுப் பசியின் கொடுமையால் நாம் படும் துன்பத்தை நினைத்துப் பார்த்து—நம்மைப் பணிகொண்டு கௌரவமான முறையில் உண வளிக்க முன்வருவார்களா?

நாம் குரைப்பதை மனிதர்கள் மிக மிக இழிவாகக் கருதுகிறார்கள். இறைவன் நமக்கு அளித்தருளிய குரலின் இனிமை நமக்கல்லவோ தெரியும்! இசை யின்பத்தில் ஈடுபட்ட பெரியோர்கள், நமது குரைப்பிலிருந்து கண்டு பிடித்த மனோகரமான இருவித இராகங்களுள்—ஒன்றை "பைரவி" என்றும், மற்றொன்றை "ஆனந்த பைரவி" என்றும் பெயரிட்டுப் பாடி மகிழ்ந்தனர். அத்தகைய சங்கீத ஞான நுட்பம் இல்லாதவர்கள் நமது குரலைப் பழிப்பதை, நாம் ஏன் பொருட்படுத்தவேண்டும்?

நம்மைப் படைத்தவனும் அருளாளனாகிய ஆண்டவனே! மனிதரைப் படைத்தவனும் அதே ஆண்டவன் தான்! சண்டாளத்தன்மையை உண்டாக் கக்கூடிய கொடும் பாவங்களுள் தலையாய பெரும் பாவம் செய்ந்நன்றி மறத் தலே. "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை; செய்ந்நன்றி கொன்ற மகற்கு"—என்றார் நாயனார். அத்தகைய நன்றி மறக்கும் கொடும் பாவத்தைச் செய்வோர் நாமா? மனிதர்களா? அதைச் சிறிதும் சிந்தித்துப் பாராத மனிதர்கள் நம்மை இழிவு படுத்தி வருவதை, நாம் இன்னும் பொறுத் துக்கொண்டிருக்கக் கூடாது. வரவேற்புக் கழகத் தலைவர் அறிவுறுத்தியதற் கிணங்க, மனித சமூகத்தில் 'தாழ்த்தப்பட்ட எளிய ஜனங்கள்' தங்களது முன்னேற்றத்தின்பொருட்டு முயற்சித்து வருவதைப் போன்றே, மிருக சமூ கத்தில் தாழ்த்தப்பட்டுள்ள நம்மினத்தினரும் நமது முன்னேற்றத்தின் பொருட்டு தீவிர முயற்சிகளைச் செய்யவேண்டுவது நமது கடமையாகும். நமது நன் முயற்சிகளுக்கு ஏழை பங்காளனாகிய இறைவனது இன்னருள் துணை கிடைப்பது உறுதி. ஆதலால், சகோதரர்களே! உங்களை நாய்களாக நினைத்துக்கொள்ளாமல் சிங்கக் குட்டிகளாக எண்ணிக்கொண்டு, சமூக சேவை யில் தீவிர உற்சாகத்துடன் ஈடுபடக் கடவீர்களாக!"—என்று அக்கிராசனப் பிரசங்கத்தை முடித்துக்கொண்டு அமர்ந்தார். பிரதிநிதிகளனைவரும்

தங்களது 'ஆனந்த பைரவிக்' குரலில், தங்களது தீவிர உற்சாக ஆரவாரத்தை உச்சஸ்வரத்தில் வெளியிடலாயினர்.

அம்மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களனைத்தையும் பிரேரேபித்தவர்—ஆமோதித்தவர் முதலியவர்களுடைய பேச்சுகளுடன் வெளியிடின் மிக விரியும் என்று அஞ்சி, முக்கியமான ஆறு தீர்மானங்கள் மட்டும் இங்குக் குறிப்பிட்டு இக்கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

(1) 'நாய்கள் என்னும் பெயர், 'பறையர்கள்' என்னும் பெயரைப்போல் இக்காலத்தில் மிக்க இழிவான தொனியைப் பெற்றுவிட்டதால் இனிமேல் நம்மை அப்பெயரால் எவரும் குறிப்பிடாதிருக்குமாறு இம்மகாநாடு மனித சமூகத்தை வேண்டிக்கொள்கிறது. (இவ்வேண்டுகோளை மதியாமல்—எவரேனும் அவ்வாறு குறிப்பிட்டுக் கூறக்கேட்டால், மான உணர்ச்சி உடைய ஒவ்வொரு வயிரவரும் அவர்கள் மீது வீழ்ந்து கடிக்க முயல்வதுபோல் பாவனை செய்யவேண்டும்; அவ்வாறு அச்சுறுத்தியும் அவர்கள் அஞ்சாமல் நம்மை அடிக்கவந்தால், நமது உடம்பில் இரத்தக்காயம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.)

(2) 'கடவுளுக்குப் பிரியமானவர்கள்' என்னும் பொருளில் 'ஹரி ஜனங்கள்' என்னும் பெயர் தாழ்த்தப்பட்ட மனிதர்களுக்கு எவ்வாறு வழங்கப்பட்டு வருகிறதோ, அவ்வாறே நமது 'குலதேவதையின் குடிமக்கள்' என்னும் பொருளில் 'வயிரவர்கள்' என்னும் பெயராலேயே இனி நம்மவரை வழங்க வேண்டும் என்று இம்மகாநாடு ஏகோபித்துத் தீர்மானிக்கிறது. (இதனால் வயிரப் பைத்தியமுடைய மங்கைகளிடம் வளரும் பேறு பெற்றிருக்கும் நமது இனத்தினர்—அவர்களால் அடிக்கடி செல்வமாக அழைக்கப்பெற்று முத்தங்கள் பல பெற்று மகிழவும் கூடும்.)

(3) செல்வர்கள் வீட்டில் செல்வமாக வளரும் பாக்கியம் பெற்றவர்களைக் கண்டு எளிய நிலையிலுள்ளவர்கள் சிறிதளவும் பொறாமையடையக்கூடாதென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது. ("தாங்கள் ஊழ்வினைப் பயனால் துன்புற்றாலும், தங்கள் சமூகத்தைச் சேர்ந்த மற்றவர்களாவது இன்புற்று வாழட்டும்"—என்று ஒவ்வொரு வயிரவரும் எண்ணுதல் வேண்டும்.)

(4) செல்வர்கள் வீட்டுச் சுகானுபவங்களில் மனமார்ந்த வெறுப்படைந்து 'சமூக சேவையே பேரின்பம் பயப்பது'—எனும் உண்மையை உணர்ந்துகொண்டு சமூகத் தொண்டு செய்ய மனங்கொண்டு வருபவர்களை பேரார்வத்தோடு நல்வரவேற்று, அவர்களது சமூகப் பணிகளுக்குப் போதிய ஊக்கம் ஊட்ட வேண்டும் என்று இம்மகாநாடு ஒவ்வொரு வயிரவரையும் வேண்டிக்கொள்கிறது.

(5) பார்ப்போர் பரிகசித்தற்கு உரிய கேவலமான இழிந்த செய்கைகளில் கூடியவரையில் தலைப்படாமல் எச்சரிக்கையாக நடந்துகொள்ளுமாறு உறுதிகொள்ளும் வண்ணம்—இம்மகாநாடு நமது சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரையும் பெரிதும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறது.

(6) செய்ந்நன்றி 'மறவாமை' என்னும் இறைவனால் அளிக்கப்பட்டுள்ள நமது சமூகத்தினரின தனிப்பெருஞ் சிறப்புடைய சீரிய குணத்தின் புகழ் குன்றாவாறு, கேவலம் பொறாமை காரணமாக அற்பச் சச்சரவு எதிலும் தலையிடாதபடி பிரதிக்ஞை செய்துகொள்வதோடு—தங்களது சகோதரர்கள் அனைவரிடத்திலும் அன்போடு நடந்துகொள்ளுமாறு இம் மகாநாடு ஒவ்வொரு வயிரவ சகோதரரையும் பெரிதும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறது.

# பாலர்கள் பக்கம்



## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(செம்பூர் வித்வான். வீ. ஆறுமுகஞ் சேர்வை.)

### 50. "சேர் இடம் அறிந்து சேர்"

"சேர் இடம்—அடையத் தகுந்த (நல்ல) இடத்தை, அறிந்து—தெரிந்து, சேர்—(நீ) அடையக் கடவாய்" என்பது இதன் பொருள்.

மனிதர், நல்லோர் இருக்கும் இடத்திலேயே சேரவேண்டும். அப்படிச் சேர்வோருக்கு எவ்வித தீங்கும் நேராது; நன்மையே உண்டாகும். தீய குணமுடையார் இருக்கும் இடத்தில் சேர்பவர்களுக்கு எப்போதும் தீங்குண்டாகும். சேரத்தகாத இடத்தில் சேர்ந்தவர்கள் தீமை அடைந்த கதைகள் பல உண்டு. அவற்றில் ஒன்றை இதற்கு உதாரணமாக இங்கே எழுதுவாம்:

சாம்பசிவன் பரசுராமன் என்னும் இருவர் ஒரு ஊரில் சிநேகிதர்களாயிருந்தார்கள். இருவரும் ஒரே பள்ளிக்கூடத்தில் கல்வி கற்றார்கள். படிப்பு முடிந்த பிறகு ஒவ்வொருவரும் வெவ்வேறு ஊர்களில்போய் உத்தியோகத்தில் இருந்தார்கள். சாம்பசிவன் நல்ல குணமுடையவன்; சிறிதும் வஞ்சனையில்லாதவன். பரசுராமனோ மிகவும் கெட்ட சுபாவமுள்ளவன்; பேராசைக்காரன்; பிறரை வஞ்சித்துப் பிறர் பொருளைக் கவருவதிலேயே எப்போதும் நாட்டமுடையவனாயிருப்பான். இருவரும் கலியாணம் செய்து கொண்டார்கள். இருவருக்கும் குழந்தைகள் இருந்தன. சாம்பசிவன் தன் சம்பாத்தியத்தைச் செட்டாகச் செலவு செய்து, அதில் கொஞ்சம் கொஞ்சமாக மீதிப்படுத்திக் கையிருப்பில் அதிகப் பணம் சேர்த்து வைத்திருந்தான். தன்னுடைய மனைவிக்கும், குழந்தைகளுக்கும் ஆயிரம் ரூபாய்க்கு மேல் நகைகளும் செய்து போட்டிருந்தான். பரசுராமனோ இடம்பமான செலவுக்காரன். தனக்கு அதிகச் சம்பளம் ஏற்பட்டிருந்தும் மாதந்தோறும் சம்பளத்தை வாங்கி இடம்பச் செலவு செய்துவிட்டு மேலும் கடன் வாங்கிச் செலவு செய்து வந்

தான். அதனால் அவன் கையில் பொருள் சேரவில்லை. அவன் மனைவி மக்கள் உடம்பிலும் ஒரு சிறு நகைகூடக் கிடையாது. அவர்கள் கட்டிக் கொள்வதற்கு நல்ல வஸ்திரம் கூடக் கிடைப்பதில்லை. அவனுக்குக் கடன்தான் அதிகமாயிருந்தது. இடம்பமான வாழ்க்கை யுடையவர்கள் குடும்பத்தில் எவ்வளவு வருமானம் இருந்தாலும் இவ்வாறு தரித்திரம் குடிகொள்வது இயற்கை தானே? பரசுராமன் இவ்வாறு வறுமை அடைந்திருந்தாலும் தன்னுடைய இடம்பத்தை மாத்திரம் குறைத்துக் கொள்வதில்லை. கடன் வாங்கியாவது செலவு செய்து மிகுந்த இடம்பம் காட்டிக் கொள்வான். இதற்காகப் பொருள் தேடுவதற்குப் பிறரை எமாற்றி மோசஞ் செய்வதிலும், திருடுவதிலும் மிகுந்த சிரத்தையுடையவனு யிருப்பான்.

இப்படி இருவரும் வாழ்ந்துவரும் காலத்தில் ஒரு சமயம் சாம்பசிவன் தன் சொந்த ஊருக்குப்போய்த் தான் சேர்த்து வைத்திருந்த ரூபாய்க்கு நிலம் வாங்கி வைத்துவிட்டு வரலாமென்று மனைவியையும், குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு ரயிலேறிப் போனான். அவன் உத்தியோகத்தில் இருந்த ஊருக்கும், அவனுடைய சொந்த ஊருக்கும் மத்தியில் பரசுராமன் உத்தியோகம் செய்த ஊர் இருந்தது. அங்கே வரவும் இராத்திரி காலமாய் விட்டது. அதனால் சாம்பசிவன் அந்த ஊரில் இறங்கித் தன்னுடைய சிநேகிதனாகிய பரசுராமன் வீட்டில் தங்கி மறுநாள் போகலாமென்று மனைவி மக்களுடன் அந்த ஸ்டேஷனில் இறங்கினான். மனைவியையும், பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு பரசுராமன் வீட்டுக்குப் போனான். பரசுராமன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் சாம்பசிவனுக்குத் தெரிந்த மற்றொரு சிநேகிதன் இருந்தான். அவன் சொற்ப சம்பாத்திய முடையவன்; வறிய நிலையில் உள்ளவன். ஆனால் மிகவும் சத்தியவந்தன்.

சாம்பசிவன் ரயிலை விட்டிறங்கிப் பரசுராமன் வீட்டுக்குப் போகும் போது சாம்பசிவன் மனைவி பரசுராமன் துர்க்குண முடையவன் என்பதை அறிந்திருந்தபடியால், "அங்கே போகக்கூடாது; மற்றொரு சிநேகிதர் வீட்டுக்குப் போகலாம்" என்று சொன்னாள். சாம்பசிவன், "மற்றொரு சிநேகிதன் மிகவும் ஏழை; நமக்கு ஒரு வேளை சாப்பாடுபோட்டு உபசாரம் செய்வதற்கும் கஷ்டப்படுவான்; பரசுராமன் இங்கே மிகுந்த செல்வாக்குடையவன்; நமக்கு உயர்ந்த விருந்து செய்வான்" என்று கூறிப் பரசுராமன் வீட்டிற்கே அவளைக் குழந்தைகளுடன் அழைத்துக்கொண்டு போனான். இந்தக் காலத்தில், இடம்பமானவர்கள் எவ்வளவு கெட்டவர்களாயிருந்தாலும் அவர்களையே பலரும் கொண்டாடுவார்கள். இடம்பமில்லாத ஏழைகள் எவ்வளவு நல்லவர்களாயிருந்தாலும் அவர்களை ஒருவரும் சட்டைபண்ண மாட்டார்கள்.

பரசுராமன், சாம்பசிவனையும் அவனுடைய மனைவி மக்களையும் கண்டவுடன் மிகவும் கொண்டாடினான். உயர்ந்த சாப்பாடு செய்துபோட்டு அவர்

களுக்கு விருந்து நடத்தினன். எல்லோரும் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டார்கள். பரசுராமன் சாம்பசிவனுடைய சம்பாத்தியத்தைப் பற்றி விசாரித்தான். சாம்பசிவன், "நான் இதுவரை சம்பாதித்ததில் என் மனைவி மக்களுக்கு ஆயிரம் ரூபாய் நகை செய்து போட்டிருக்கிறேன்; நிலம் வாங்குவதற்காக இப்போது ஆயிரம் ரூபாய் கொண்டுபோகிறேன்" என்று அவனிடம் உண்மையைக் கூறிவிட்டான். அந்தப் பாதகன் சாம்பசிவனுடைய பொருள்களைக் கைப்பற்றிகொள்ள வேண்டுமென்று அப்பொழுதே நினைத்துவிட்டான். தன் மனைவியைத் தனியாக அழைத்துக்கொண்டுபோய், "இவர்கள் ஏராளமான பொருள் கொண்டுவந்திருக்கிறார்கள். ராத்திரிக்கு இவர்களைக்கொன்று வீட்டிற்குள்ளேயே புதைத்துவிட்டு நகைகளையும் ரூபாயையும் நாம் எடுத்துக் கொள்ளவேண்டும்; நாம் இவர்களைக் கொலைசெய்வது ஒருவருக்கும் தெரியாமல் போய்விடும்" என்று அவளிடம் கூறினன். அவள் தன் புருஷனைப் போலவே பேராசையுடையவள்; ஆதலால் அந்தக் கொடுங் காரியத்திற்கு உடனே இசைந்துவிட்டாள். பிறகு பரசுராமன், "நான் சாம்பசிவனை வேலை முடித்துவிடுகிறேன். நீ அவன் மனைவியை வேலை தீர்த்துவிடு; பிறகு பிள்ளைகளை எளிதாகக் கொன்றுவிடலாம்" என்று அவளிடம் திட்டம் செய்தான்.

சாம்பசிவனும், அவன் மனைவி மக்களும் நன்றாய்த் தூங்கும் சமயம் பார்த்து பரசுராமன் ஒரு கத்தியை எடுத்துக்கொண்டுபோய்ச் சாம்பசிவன் மார்பில் ஏறி உட்கார்ந்து அவனைக் குத்தப்போனன். அவ்வாறே பரசுராமன் மனைவியும் சாம்பசிவன் மனைவியின் நெஞ்சின்மேல் ஏறி உட்கார்ந்துகொண்டு அவளைக் குத்தப் போனள். சாம்பசிவனும் அவனுடைய மனைவியும் மிகுந்த பலமுள்ளவர்கள். ஆதலால் சாம்பசிவன் தன் மார்பில் உட்கார்ந்து தன்னைக் குத்தக் கத்தியை ஓங்கிய பரசுராமன் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டு அவனைக் கீழே தள்ளி மேலே ஏறி உட்கார்ந்து "ஐயோ! என்னை ஒரு பாவி கொலை செய்கிறான்; ஊராரே ஓடிவாருங்கள்" என்று சத்தம்போட்டான். சாம்பசிவனுடைய மனைவியும் பரசுராமன் மனைவியின் கரத்திலிருந்த கத்தியைப் பிடுங்கிக்கொண்டு அவளைக் கீழே தள்ளி அழுத்திப் பிடித்துக்கொண்டு சாம்பசிவனைப் போலவே சத்தம் போட்டாள்.

இருவரும் கூவுவதைக் கேட்டுப் பக்கத்து வீட்டிலிருந்த சாம்பசிவனுடைய மற்றொரு சிநேகிதன் ஓடிவந்து கதவைத் தட்டினன். சாம்பசிவன் பரசுராமனுடைய கைகளைத் துணியால் கட்டிவிட்டு ஓடிவந்து கதவைத் திறந்தான். அந்தச் சிநேகிதன் உள்ளே வந்து, "என்ன நடந்தது" என்று கேட்டான். அதற்குள் ஊராரும் அங்கே வந்து கூடிவிட்டார்கள். சாம்பசிவன் எல்லோரிடத்திலும் நடந்த சங்கதியைக் கூறினன். வந்த ஜனங்கள் பரசுராமனையும் அவன் மனைவியையும் திட்டினர்கள். உடனே போலீஸில் சேர்த்தார்கள். அவர்கள் கொலை செய்ய யத்தனித்த குற்றத்திற்காக அதிகாரியால் தண்டிக்கப்பட்டார்கள்.

# சிறுவர் விளையாட்டுக்கள்



(வீ. சங்கரையர்.)



"சிறுவர்களுக் குதவும் விளையாட்டுக்கள்" என்னும் பேரால் எழுதியிருக்கின்றவைகளெல்லாம் J. வின்சென்ட் மெண்டிஸ் என்னும் பெரியோரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு மங்களூர் பேசல் மிஷின் கம்பெனியாரால் பிரசுரிக்கப்பட்ட, "Games for schools and scouts" என்னும் புஸ்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இவைகளை முதலில் தமிழில் மொழி பெயர்த்து என் பிள்ளைகளைக் கொண்டு நன்ருக விளையாடச் செய்தேன். அப்பிள்ளைகள் இவ்விளையாட்டுகளில் அதிக ஆனந்தம் அனுபவித்து தினமும் இவைகளை விளையாடிவந்ததைக் கண்டு என் பிள்ளைகள் மட்டும் இவ்வானந்தத்தை அனுபவிப்பது போதாது என்ற அவாவால் ஷை கம்பெனியாருக்கு எழுதி அவர்கள் அனுமதியின் பேரில் இம்மாதாந்திரப் பத்திரிகையில் பிரசுரிக்கத் தீர்மானித்தேன். "ஆனந்தபோதினி" மாதப் பத்திரிகையை அனேகாயிரம்பேர்கள் ஆதரிப்பதாலேயே இதில் பிரசுரித்தால் அதிக உபயோகப் பிரதமாக யிருக்கும் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். இதைத் தமிழில் பிரசுரம் செய்ய எனக்கு அனுமதி கொடுத்த மங்களூர் பேசல் மிஷின் கம்பெனியாருக்கும், இப்பத்திரிகை பிரசுரிக்கத் தயாராக விருக்கும் "ஆனந்தபோதினி" மானேஜர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த வந்தனத்தை அளிக்கின்றேன். வீ. சங்கரய்யர்.

## 1. டாட்ஜ் பால். (Dodge ball)

ஒரு வட்டம் போடவும். பையன்களை இரு சம பாகங்களாகப் பிரித்து ஒரு கட்சியாரை உள்ளேயும், மற்ருெரு கட்சியை வட்டத்தைச் சுற்றி சம தூரத்தில் வெளியேயும் நிறுத்தவும். வெளியேயுள்ளவர்களில் ஒருவன் ஒரு பந்தை உள்ளிருப்பவன்மீது எறியவும். பந்து எறிபட்டவன் வெளியேறி விடவேண்டும். இப்படி உள்ளிருந்தவர்களைப் பூராவும் வெளியேற்றவும். பிறகு கக்ஷிகள் மாற்றி (உள்ளிருந்தவர்கள் வெளியேயும் வெளியே யிருந்தவர்கள் உள்ளேயும் மாற்றி)க்கொள்ளவேண்டும். எந்தக்கக்ஷி வெளியேருமல் அதிக நேரம் உள்ளே யிருந்ததோ அந்தக் கக்ஷியே ஜயித்தது.

## 2. ஸ்பட் (Spud)

3 அடி விலாசமுள்ள ஒரு சிறு வட்டம் போடவும். பையன்களுக்கு முன்னுடியே நம்பர் கொடுத்து அவர்கள் வலது காலை வட்டத்தில் வைத்துக்கொண்டு நிற்கச் சொல்லவும். ஒருபந்தை வட்டத்திற்குள் போட்டு ஒரு நம்பரைச் சொல்லவும். அந்த நம்பருள்ள பையன் பந்தை எடுக்கவேண்டும். மற்றவர்கள் நாலாபக்கமும் ஓடவேண்டும். பந்தை எடுத்தவன் உடனே 'நில்' என்று சொல்ல வேண்டும். உடனே எல்லாரும் நின்றுவிட வேண்டும். அவன் ஒருவன் மீது பந்தை எறிய வேண்டும். பந்தால் அடி பட்டவன் பந்தை எடுத்துக்கொண்டு 'நில்' என்று சொல்லிப் பந்தை எறிய வேண்டும். இப்படியே விளையாடவேண்டும். பந்து குறி தவறி ஒருவர் மீதும் படாவிட்டால் முன்போல் வட்டத்தில் யாவரும் நின்றுகொண்டு விளையாட்டை முன் போல் ஆரம்பிக்கவேண்டும். ஒருவன் மூன்று தடவை தவறிவிட்டால் முறையே யாவரும் அவனை நிறுத்தி அவன் முதுகின்மேல் பந்தை 15 தப்படி தூரத்திலிருந்து எறியவேண்டும்.

## 3. பால் டாக் (Ball Tag)

பையன்களெல்லாம் வட்டமாக நிற்கவேண்டும். அவர்களில் ஒருவன் நடுவில் நிற்கவேண்டும். கோட்டிலுள்ள ஒருவனிடம் ஒரு பந்தைக் கொடுக்க வேண்டும். அவன் அதை அடுத்தவனிடம் எறிந்து கொடுக்க வேண்டும். எறிந்து கொடுக்கும்பொழுது நடுவிலுள்ளவன் பிடித்தாலும் அல்லது அந்தப் பந்து தவறி வட்டத்திற்குள் விழுந்து நடுவிலுள்ளவன் எடுத்தாலும் தவறி விட்டவன் நடுவேயும் நடுவிலுள்ளவன் தவறினவனிடத்திலேயும் போகவேண்டும். வெளியே விழுந்தால் அடுத்தவன் பந்தை எடுத்துக்கொண்டு விளையாடலாம்.

## 4. பேயன் பந்து

ஒரு பந்தை மேலே எறிய வேண்டும். எல்லாரும் பிடிக்க முயலவேண்டும். பிடித்தவன் வேறொருவன் மீது எறிய வேண்டும். அடி பட்டவன் பந்தை எடுத்து வேறொருவன்மீது எறியவேண்டும். பந்து தவறிக் கீழே விழுந்தால் யாரும் எடுத்து எறியலாம். ஆகையால் எல்லாரும் பந்தெடுக்கவோ அல்லது அடிபடாமல் தப்பிக்கவோ உள்ள முயற்சிக்காக ஓடிக்கொண்டேயிருப்பார்கள்.



**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# நீதி பரிபாலனம்.

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை அவர்கள்.)

இத்தலையங்கம் ஓர் அரசன் தன் கீழ் வாழும் குடிமக்களுக்கு எவ்வளவு நியாயம் வழங்கவேண்டும்? என்று சிறிது கூறப் புகுந்தாம். நியாயம் வழங்குதல் என்பது கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளான ஒருவனது குறைகளைத் தீரவிசாரித்து அறிந்து அவற்றிற்குத் தக்க பரிகாரங்களைச் செய்து கொடுப்பதும், பின்னும், அத்தகைய தொல்லைகளை அவன் சந்திக்கா திருக்கும் வகையில் முறை செய்வது மாகும்.

இங்ஙனம் நியாயம் வழங்கவேண்டிய அரசன் எந்நாளும் குறை யிரந்து முறையிட்டுக் கொள்வோர் காட்சிக்கு எளியவனாகவும், கடுஞ்சொல்லன் அல்லனாகவு மிருத்தல் வேண்டும்.

தம்மிடம் வழக்குத் தொடுக்க வந்திருப்பவர்களில், எவர் தமர்? எவர் பிறர்? என்று ஆராய்தல் கூடாது; ஏனெனில் தம்மால் விரும்பப்பட்டவரைச் சார்ந்ததாயின் குற்றம் தோன்ற மாட்டாது; வெறுக்கப்பட்டவரைச் சார்ந்ததாயின் குணம் தோன்ற மாட்டாது.

இருவர் வழக்கையும் ஏழுதரம் கேட்டல் வேண்டும். ஒவ்வொருவரையும், தனித்தனியாகவும், எல்லோரையும், ஒன்று சேர்த்தும் கேட்டல் வேண்டும். மறைந்து சென்று, குற்றம் குறை நடந்தது எனக் கூறப்படும் இடத்திலும் விசாரித்தறிதல் வேண்டும். 'வழக்குடையான் வறிதே நிற்க, வலியானைக் கூடி வழக்கை அழி வழக்குச் செய்தல்' கூடாது; 'ஏனெனில், 'வழக் கிழந்தோன் சுற்றமும், தானும், தொடர்ந்து அழுத கண்ணீரால், எச்சம் அறும்' என்பது ஔவை வாக்காதலின் என்க. "அல்லற்பட்டாற்றாது அழுத கண்ணீர் அன்றே—செல்வத்தைத் தேய்க்கும் படை" என்பதும் அது.

நமது நாடு நீதிபரிபாலனத்தில் தலைசிறந்து விளங்கியது. மனுச்சோழன் என்ற பெயர் வாய்ந்த சக்கரவர்த்தி தனது ஒரே மகனை ஓர் ஆவின் கன்றின் பொருட்டுத் தேர்க்காலி லிட்டுத் தானே அறைக்கத் தொடங்கினான். பொற்கைப் பாண்டியன் என்பான் கற்புடை நங்கை ஒருத்தி தனித்துறையும், வீட்டின் கதவைத் தட்டியதற்காகத் தனது கையைக் குறைத்துக் கொண்டான். தன்னை "ஆண்டிற் சிறியவன். இவன் எப்படி நமது வழக்கைத் தீர்க்கப் போகிறான்" என்று வழக்கினர் கூறியதைக் கேட்ட கரிகாற் பெருவளத்

தான் அவர்கள் உவப்ப நரை முடித்துச் சிங்காதனத்திலிருந்து வந்த வழக்கினர் மகிழ நியாயத்தீர்ப்புச் செய்தான். திருப்புத் தூரப்பார்ப்பான் பொருட்டுக் குற்றமற்ற வேடனது தன்மையை வெளிப்படுத்த மதுரைச் சொக்கேசரைக் குறையிரந்து வேண்டி ஒரு பாண்டியன் தனது நீதிமுறையின் சிறப்பை உலகறியச்செய்து சிறப்பெய்தினன். இங்ஙனம் நிகழ்ந்த எத்தனையோ வரலாறுகள் நமது நாட்டுப்பண்டை பனுவல்களால் அறியப்படுகின்றன. அவை அனைத்தும் நமது நாட்டுப் பண்டை அரசர்கள் தமது குடிகளுக்கு நியாயம் வழங்கிய பான்மையை வெளியிடுகின்றன.

அன்றியும், அந்த அரசர்கள் தங்களது அரசாட்சியைக் குடிமக்களின் நன்மையின் பொருட்டுச் செய்வதாகவே கருதி வந்தார்கள். குடி மக்களுக்காகத் தாங்கள் ஊழியம் செய்யவேண்டியவர்கள் என்றும், அதன் பொருட்டே தாங்கள் ஆண்டவனால் படைத்தனுப்பப்பட்டிக்கிறோம் என்றும் கருதி வந்தார்கள். தாங்கள் தவறி முறைசெய்தால், 'தர்மதேவதையே சலித்து விடும்' என்று எண்ணி வந்தார்கள். தமது நீதிமுறையில் எங்கேனும், தவறுதல்கள் நேர்ந்து விடுமோ என்று பலதுறையிலும், ஆராய்ச்சி செய்தொழுகுவாரானார்கள். இவ்வளவு முன் ஜாக்கிரதையிலும், எங்கேனும், தவறுதல்கள் நேர்ந்துவிடின் உடனே அதற்குத் தக்க பிராயச்சித்தங்களைச் செய்துகொண்டு துன்புற்றவர்க்குச் சம்பளம் முதலிய கொடுத்து உவப்பித்தும் வந்தார்கள்.

இங்ஙனம், நமது பண்டை அரசர்கள் சிறப்பெய்துவதற்கு அக்காலத்திய குடிமக்களுடைய செய்கைகளும் துணையாய் நின்றன. பெரும்பாலும்,—முற்றிலும் என்றே சொல்லப்படலாம். பொதுஜனங்களுடைய உண்மைக்கு மாறான செயல்கள் இல்லாதிருந்தன. அவர்களிடை 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்பதுபோல் எந்நாளும் திருப்தியே குடிகொண்டிருந்தது. தங்களுக்கு, ஏதேனும் ஒன்று தேவையாயிருந்து அஃதில்லாதிருந்தால், உடனே அரசனிடம் தெரிவித்து அதனைப் பெற்றுக்கொள்ளத் தக்க நிலைமையி லிருந்தார்கள். இவ்வளவு சௌகரியங்கள் நிறைந்திருப்பினும், சிறிதேனும், தவறினால் அரசதண்டனை பெரியதாகும் என்ற அச்சத்தினின்றும் நீங்காதவர்களாயு மிருந்தார்கள்.

மேலும், எங்கேனும் ஒரு தீச்செயல் காணப்படின், அவ்விடத்தே அரசன் சிறிதும் காலதாமதமின்றி நேரிற்சென்று உண்மையை அறிந்து தவறிழைத்தவர்க்குத் தண்டனை விதிப்பது ஒருதலை யாதலின் எவரும் பிழைசெய்வதற்கு அஞ்சுவர். யாண்டும் உண்மை வழியே உறுதியாய் நடந்து வந்தார்கள். எதிர் பாராது அறியாது நேரும் இடையூறுகளை அன்றி வேண்டுமெனத் தொல்லைகளும் அநீதிகளும் உண்டாகாமல் இருந்தன.

இத்துணையுங் கூறியவாற்றால் ஒரு நாடு சரியான நியாயம் வழங்க வேண்டுமாயின் அந்நாட்டிலுள்ளோர் உண்மை வழி ஒழுகவேண்டும் என்பதும், அதனை ஆளும் அரசன் யாண்டும் காய்தல், உவத்தல் அகற்றி உண்மையைக் கண்டுபிடிப்பதிலேயே முயலவேண்டும் என்பதும் ஒரு சிறிது விளங்கும்.



# சோதிடப் பகுதி.

## சோதிட சாஸ்திராநுசரணைக்குச் "சாயனமோ" "நிரயனமோ" கொள்ளற்பாலது ?

(மட்டக்களப்பு-ஆர். பரமானந்தன்.)

பருதி முதலான கிரகங்கள் சஞ்சரியா நிற்கும் இராசி மண்டலம் 'சாயனம்' என்றும், 'நிரயனம்' என்றும் இருவகைப் பட்டதாகும். இவற்றுள் நிரட்சத்தின் உத்தரபாகத்தில் மேஷாதி கன்னியாந்தமாயும் தட்சணபாகத்தில் துலாதி மீனாந்தமாயும் அமைந்த இராசி வட்டம் சாயன மண்டலமென்றும், அசுபதியாதி 27-நட்சத்திரங்களும் மேடாதி மீனாந்தமாயமைந்த இராசிவட்டம் நிரயன மண்டலமென்றும் அழைக்கப்படும். இவ்விருவகை அயனங்களுள் மேலைத் தேசத்தார் சாயனத்தையும், கீழைத் தேசத்தார் நிரயனத்தையும் அனுசரித்து வருகின்றார்கள். "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" என்றபடி, இவற்றுள் எவ்வயனங் கொள்ளற்பாலதென்பதை ஐயந்திரிபற ஆராய்ந்துணர்ந்து, அதன்வழி நிற்றல் அறிவுடையாரின் கடனாகும்.

வேதகாலத்திருந்தே ஆறு சாஸ்திரங்களி லொன்றாய்ச் சோதிட சாஸ்திரம் ஆளப்பட்டு வந்தாலும், இதற்காதாரமான வான சாஸ்திரம் சாயன நிலையைக் கொண்டே கணிக்கப்பட்டு வருதலாலும், அயன சலனத்தை யளந்து காண்பதற்கு (அளவிறந்த தூரத்தால் அசைவற்ற நட்சத்திரங்களாய்த் தோற்றுவனவாகிய) நட்சத்திரங்களே ஆதாரமாய் நிற்றலாலும், வருஷமொன்றுக்கு $50\frac{1}{4}$ விகலை வீதம், அசவ்வியகதியாய் 25872-வருஷங்களில் முடிவடைவதான சாயனவட்டத்தின் சலனத்தால், சாயன மேஷாரம்பம் பேதமடைந்து வருதலாலும், காலபுருஷனினங்க வகுப்பு, திரையம், பூதியம், ஆட்சி உச்சாதி பெலாதிக்கியங்கட்கும் சாயன ராசிகளே அனுபவத்துக் கொத்தவையாயிருத்தலாலும், இவைகளை யாராய்ந்துணர்ந்த "சொல்தேயர்" (Choldeans) முதலிய மேலைத் தேசத்தார் 5500-வருடங்களின் முன் தொடங்கிய சாயன ரீதியாகிய ஜனன சாதகம், அண்ட சாதகம் ஆகியவைகளை அனுசரித்து வருகின்றார்கள். அன்றி நட்சத்திரங்களையும் இந்துக்களைப்போல 27-ல் நின்றுவிடாமல், எண்ணிறந்த வான சோதிகளுள் 60-நட்சத்திரங்களை யாராய்ந்துணர்ந்து, அவைகள் சாயன மண்டலத்தில் அமைந்து நிற்கும் பாகைகளையொட்டியும் பலன் சொல்லுகிறார்கள். இங்ஙனம் இப்பழமையான சோதிட சாஸ்திரத்தை அவர்கள் திருத்தியும் புதுக்கியும் செம்மை வாய்ந்த முறையில் பரிபாலித்து வருதல் பெரிதும் போற்றத்தக்க தொன்றாம்.

இந்துக்கள் சுருதியெனப் போற்றிவரும் அரிதினுமரிய பல சாஸ்திரங்களை ஆக்கினோரும் தமக்கொப்பாரும் மிக்காருமில்லாத அறிவிற் சிறந்த பெரியாருமாய் விளங்கிய மகரிஷிகள் சாயனத்தைக் கொள்ளாது, நிரயனத்தைக் கையாளும்படியான சித்தாந்தங்களையும் வாக்கியங்களையும் எதனாலியற்றி

வைத்தார்களெனவாராயுங்கால் தற்காலத்தைப்போல் அக்காலத்தில் அழகாயுந் தெளிவாயும் ஒரே நாளில் ஆயிரக்கணக்கான பிரதிகளைப் பதித்து உலகுக்குத வுவதான அச்சியந்திரமோ ஒவ்வொரு விநாடியையுமளந்து காட்டுவதற்கான கடிகாரம் முதலிய கருவிகளோ வாய்க்கப் பெறாமையால், காலதேச வர்த்த மானங்கட்கேற்ப சூரிய சந்திர சாய்கைகளில் அடியளந்தும், நட்சத்திர உச்சத் தாலும் உதயாதி நாழிகையறிய விதிகளமைத்தும், இவ்வகைகளிற் காணும் நாழிகைகள், அயன சலனமாதியவற்றால் பிழையுறுமாதலின் இலக்கின நிச்ச யத்தால் அப்பிழைகளைத் திருத்திக்கொள்ளும் விதிகளையும், பஞ்சாங்கமாகிய கிரகஸ்புடங்களைப் பழமையான பதினெண் சித்தாந்தங்களின்படி கணித்தல் கடினமென இவைகளை யாதாரமாய்க் கொண்டு பிற்காலத்தில் வாருசி யென்னும் வான சாஸ்திரிகள் வாக்கிய கணிதத்தையு முண்டாக்கி யுதவினார்க ளென்றும் அனுமானிக்கக் கூடியதாயிருக்கிறது. இவ்விதிகளை யாம் சுருதிக ளாய்ப் போற்றுகிறோமன்றி யுத்தி யனுபவத்தைச் சிறிதேனு முபயோகிக் கின்றோமோ?

ஆகர்ஷண சக்தியால் சூரியனை மையமாய்க் கொண்டு பேதமானதூரம் கதிகளிலமைந்த அந்தரத்திற் சுழலாநிற்குங் கிரகங்கள் ஒன்றுக்கொன்று தூரித்தும் சமீபித்தும் செல்ல நேரிடுவதால், தக்கவாறு அவைகளின் கவர்ச் சிப் பிரமாணமும் கதிகளும் பேதமடையுமாதலின், அவைகளைத் தற்காலங்க ளிற் தகுந்த பரிசோதனைகளால் திருத்திக் கணிப்பவர்களான "திருக்கணிதர்" களோடு வாக்கிய கணிதர்களும் ஒத்துழையாமையா லுண்டாகு மிழுக்கு பெரி தும் வருந்தத்தக்கது. ஒற்றுமைக் குறைவால் இந்தியர்க்குற்ற பெருங் குறை களை நிறைவெய்துவிக்கும் பொருட்டு முன்வந்த அறிவிற் சிறந்த பெரியார் பலரு ளொருவரான "பாரதியார்" "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும், இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியிலியற்றல் வேண்டும், மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல் வதிலோர் மகிமையில்லை, திறமான புலமையெனிற் பிறநாட்டாரதை வணக் கஞ் செய்தல் வேண்டும்" என்று கூறியவையும், 5—6—29-ல் "ஆனந்த போதினி" வாரப் பதிப்பில், வெளிவந்ததான பூனாவிற்கூடிய "தர்ம சாஸ்திர மகாநாட்டில்," சமஸ்கிருத பண்டிதர்களின் சபையில், பம்பாய் ஹைகோர்ட்டு நீதிபதி ஸ்ரீமான் மத்கௌம்கர் அவர்களின் தலைமையின் கீழ், ஸ்ரீமான் நரசிம்ம சிந்தாமணியவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவில், "ஆயிரக் கணக்கான வரு ஷங்களின் முன் எழுதப்பெற்ற தர்ம சாஸ்திரம் எக்காலத்துக்கும் ஏற்றதாகு மென்று எதிர்பார்ப்பது சரியன்று. தர்ம சாஸ்திரங்களை வகுத்தவர்கள் மனி தர்களே; அவர்களுக்குள் அபிப்பிராய பேதம் காணப்படும்; அவர்களும் காலத் திற் கேற்றபடி சாஸ்திரங்களை மாற்றுவதற்குத் தங்களுக் கதிகாரமுண்டென்று கூறியிருக்கிறார்கள். அப்படிச் செய்தால் மட்டுமே சாஸ்திரங்களால் ஜன சமூ கத்திற்கு நன்மை விளையும்" என்று கூறியவையுமாகிய செம்மொழிகள் செயன்மேற் கொள்ளப்பட வேண்டுமென்றே பண்டிதமணி கதிரேசச் செட்டி யார் முதலான பேரறிஞர்கள் தருணம் வாய்க்கும் பொழுதெல்லாம் ஷை நன் னோக்கத்தைப் பெரிதும் ஆதரித்து மிக உருக்கமாயும் விளக்கமாயும் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருகின்றார்கள். இப்பெருநோக்கத்தை விருத்தி செய்யவேண்டுமென்றே கணித விற்பன்னரான C. G. ராஜன் அவர்கள், "ஆனந்தபோதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கத்தில்" (இராசி நாழிகையைக் கொண்டு இலக்கினங்கண்டு சக்கரத்திலமைப்பதால், பாவ சகிதமான கிரக

நிலையைச் சுத்தமாயறிய முடியாதாதலின்) சோதிடர் விதிப்படி ஸ்புட ரீதியாய்ப் பாவ சக்கரத்தில் கிரகங்களையமைத்துப் பலன் சொல்லுமாறு மேலைத் தேசத்தாரனுசரிக்கும் "நட்சத்திர ஓரை"யும் அதன் உபயோக விளக்கமும் அங்ஙனங்கண்ட துவாதச பாவத்தில் அமைத்துக்கொள்ளுமாறு கிரகஸ்புடங்களும் எளிதில் விளங்கியனுசரித்திக்கொள்ளக் கூடியதால் உதாரணமும் அமைத்து வெளியிட்டிருக்கின்றனர். இவ்விதியை ஒவ்வொரு ஜோதிடரும் விளங்கி யனுசரித்த லத்தியாவசியமாயினும், வாக்கியப் பஞ்சாங்க வழக்குடையார்க்கு இவ்விதி கடினமாய்த் தோற்றுவதால் இத்திருந்திய கணித விதியை யனுசரிப்பார் மிகச் சிலரேயாவர். இந்த நன்னோக்கம் விருத்தியெய்துமாறு, மேற்கூறியபடி வாக்கிய கணிதர்களும் திருக்கணித விதியையுணர்ந்து தமிழ்நாட்டுப் பஞ்சாங்கங்களை யெல்லம் ஒரே வகையில் வெளியிட முன் வருவார்களாயின், ஒற்றுமையாலுயர்ச்சி யடைந்து தங்களை நாகரிகரெனப் பெருமை பாராட்டும் மேல்நாட்டினரைப்போல நந்தமிழ் நாட்டினரையும் உயர்வெய்துவித்தவர்களாவார்கள்.

நாம் ஆராயப் புகுந்த அயனங்களுள் சாயன மேஷாரம்பம் தற்காலம் உத்திரட்டாதி 2-ம் பாதத்தை யடைந்துவிட்டதால் நிரயனப்படி கிரகங்கள் ஒவ்வொரு ராசியினும் 3-வதுபாதத்தைத் தாண்டுமுன்னமே சாயனப்படி அடுத்த ராசியிற் பிரவேசித்துவிடுகின்றன. அஃதாவது உத்தரட்டாதி 2-ம் பாதம் முதல் அசுபதி 3-ம்பாதம் வரை சாயன மேஷராசியும் கார்த்திகை 4-ம்பாதம் வரை இடபமும் இவ்விதம் மற்றைய ராசிகளும் அவற்றிலுள்ள கிரகங்களும் மாறுபடுவதால் இவற்றுளெவ்விராசி அனுபவத்துக்கொத்திருக்கின்றதென்றாராயும்பொழுது சாயன ராசியே சரியாயிருக்கக் காண்கிறோம். உதாரணமாக:

(1) 9-3-79 (வெகுதானியவூ மாசிமீ)ல் பிறந்த ஜாதகருக்கு, உத்திரட்டாதி 3-ம்பாதத்திலிருந்த "சனி" சாயனப்படி மேஷம் 4ம் பாகையிலிருந்ததால இச்சாதகர் இளமை முதலாக சிரம், இரைப்பை ஈரல் ஆகிய உறுப்புகளைப்பற்றியதான இடைவிடாத ஜலதோஷம், அஜீரணம் முதலிய நோய்களால் வருந்துகின்றனர். மேலைத்தேச "மருத்துவ சோதிடத்"தில் துர்ப்பலமடைந்த சனி மேடராசியிலிருந்தால், இதே நோய்களுண்டாகுமெனச் சொல்லப்பட்டிருக்கிறது. (Saturn if afflicted generally produces all cold, lingering and chronic complaints, and in Aries, head, stomach and liver troubles; colds in the head, catarrh toothache etc.) மற்றோருதாரணம். (2) 5-10-78ல் பிறந்தவருக்கு துர்ப்பலமடைந்த சனி உத்திரட்டாதி 1-ம்பாதத்தினும் சாயன மீனம் 29ம் பாகையிலும் அமைந்ததால் (Danger of taking cold through getting wet feet) சாதகர் ஒரு நாள் சில மணி நேரம் வரை நனைந்த சப்பாத்துடனிருக்கச் சம்பவித்ததால் கால் விரல் நகங்களில் ரணமுண்டாகி நெடுநாளாய் வருந்துகின்றனர். இந்த இரண்டுதாரணங்களினும் நிரயனப்படி சனி மீனத்திலிருந்தும், 1-வதில் சாயன மேஷத்திருந்ததால், சிரம் முதலியவையின் நோய்களும் 2வதில் சாயன மீனந்தத்திலிருந்ததால் பாதங்களினந்தமாகிய நகங்களிலுய நோயுண்டானது வியக்கத்தக்கதன்றோ? இவ்விதமே ஏனைய கிரகங்களோடு புதிதாய்க் கண்டுபிடித்த "யூறனஸ்," "நெப்றியூன்"களையும் பரிசோதித்ததில் கால புருஷனின் அங்க வகுப்புகள் சாயன ராசிகளுக்கே பொருத்தமுடையனவாய்க்

காணப்படுகின்றன. சரம் முதலான ராசித்திரையமும் பூதியமாதியவையும் சாயன ராசிகளுக்கே ஒத்திருப்பதை மேல்நாட்டுச் சோதிட நூலுணர்ச்சியுள்ளா ரறியாதிரார்.

முன் கூறியபடி சதாசலனமடைந்து வரும் சாயன மண்டலத்தையே யனுசரிப்பின் இடையில் மாற்றிக் (வேதகாலத்தில் மிருக சீரிடத்திலிருந்த நிரயன மேஷம் இடைக்காலத்தில் கார்த்திகையிலும் தற்காலத்தில் அசுபதியி லும்) கொள்வதான அவசியமு மேற்படாது. தற்கால அயனும்சம் பாகை 22-47ஆகவிருப்பதால் இன்னும் 540 ஆண்டுகளுக்குள்ளாக, உபய ராசிகள் சராராசிகளாய் மாறிவிடுமாதலின் தற்பொழுது அசுபதியை முதல் நட்சத்திர மாய்க் கொள்வதை மாற்றிப் பூரட்டாதியை முதல் நட்சத்திரமாய்க்கொள்ள வேண்டிய அவசியமும் ஏற்படுமன்றோ?

தளரா முயற்சியால் ஆராய்ச்சி முறையிலுழைத்துப் புதிய வழிகளைக் கையாண்டுவரும் மேலைத் தேசத்தார் சூரியன் ஸாயன மேஷாதி சரத்தரை யங்களிற் சங்கிரமிக்குங் காலத்தால் அண்ட ஜாதகங் கணித்து அதன் மூல மாய்ப் பூகமபம் புயல் அரசர்களின் யுத்தம் முதலான நூதன பலன்களை வெளியிடுவதும், சித்தாந்தங்களிற் காணப்படாதவையும் மேலைத் தேச தற் கால வானசாஸ்திரிகளால் புதிதாகக் கண்டுபிடித்தவையுமான "யூரனஸ்," "நெப்தியூன்," "புளூற்றோ," ஆகிய (முறையே 1781, 1846, 1931ம் ஆண்டு களில்) கிரகங்களின் குண சீலங்களை ஆராய்ச்சியாலுணர்ந்து சாதகங்களி லமைத்துப் பலன் சொல்லி வருவதும் வியக்கத் தக்கதன்றோ?

"அலிக் ஸ்டுவர்ட்" (Alec Stuart) என்னும் சோதிடப் பெரியார், காந்தியடிகளின் பிழையான சாதகத்தைக்கொண்டு புகன்ற புன்மொழிகளை நிராகரிக்கும் நோக்கமாக 14-5-30ல் ஆனந்தபோதினி வாரப்பதிப்பில் நாம் வெளியிட்ட சாதகத்தில், ஷை ஜோதிடர் அண்ட சோதிடத்தை யொட்டி எழுதியதால், இந்தியாவின் நிலைமை ஒருவாறு ஒத்திருப்பதாகக் கூறியதோடு அடிகளின் தற்கால பலனைச் "சக்கரமகாதசை" என்னும் புதிய முறைப்படி தொகுத்து நோக்கி யெழுதிய முடிபில் 1932 ஆவணிமீல் "அடிகள் துணி வாற்றி யியற்றிய நெடுங்காலப் பிரயத்தனம் சம்பூரணமெய்தும்" என்றபடி அம்மாதத்தெழுந்த வகுப்புப் பிரச்னை (Communal award) காரணமாய் அடிகள் புரிந்த சாத்வீக யுத்தத்தின் பயனாக உலகிற் பரந்த பதை பதைப்பும் இந்தியாவுக்குற்ற இடுக்கணழிவதற்குத் தீண்டாமை யென்னும் கொடுநோய் நீங்கி ஒற்றுமை நிலவவேண்டுமென்ற அடிகளின் நெடுங்காலப் பிரயத்தினத் தைப் பற்றிய பெரு நிகழ்ச்சிகளும் ஏற்பட்டமையால் மேற்படி புதிய முறை யான தசாக்கிரமம் அனுபவபூர்வமானதென நன்கு விளங்குகின்றது. இந்தி யாவின் விடுதலையை அதற்குரிய அண்ட ஜாதகத்தோடு தலைவரின் ஜாதகத் தையும் ஒப்ப நோக்கினாலன்றிச் சொல்ல முடியாது. 1932 ஜனவரி 11-ந் தேதி சாயன மகரத்திலேற்பட்ட சனி குஜ சமாகமத்தால் இந்தியாவுக்கு நேர்ந்த கொடிய பலன்கள், இக்கிரகங்களின் அடுத்த சமாகமம்வரை நிகழு மென்பது அண்ட சோதிடத்தின் கொள்கையாகும். ஆனால் அபிமானிக ளுக்கு அதைரிய மூட்டுவதான இக்காரணம் முன் வெளியீட்டில் குறிக்கப் படவில்லை.

நட்சத்திர மகாதசை மூலமாய் காந்தியடிகள் விடுதலை யடைவாரென பிரபல சோதிடரான பலர் பற்பல தருணங்களைக் குறிப்பிட்டும், ஒன்றேனும்

நிறைவேறவில்லை. எமது நெடுங்கால அனுபவத்திலும் இத்தசாபலன்கள் பெரும்பான்மை பொருந்தாதிருக்கக் காண்கிறோம். சில ஆண்டுகளின் முன் லண்டன்மா நகரில் பிரபல சோதிடராய் விளங்கிய "அலன் லீயோ" என்பார் இற்றைக்கு 22 ஆண்டுகளின் முன் கொழும்பு நகருக்கு வந்தபொழுது நிகழ்த்திய சொற்பொழிவில், தாம் பரிசோதித்த உலகின் பலபாகத்திலுள்ள சோதிட நூல்களுள், இந்துக்களின் சாஸ்திரங்கள் சூக்குமாம்சங்கள் பலவற்றை விரித்துக் கூறினும் அவர்கள் கொள்ளும் நட்சத்திர மகாதசை யுத்தியனுபவத்துக் கொத்ததாய்க் காணப்படவில்லை யென்றும், மூன்று கூறாய் வகுத்த 9 நட்சத்திரங்களின பாகைகள் 120-க்கும், மகாதசையின் மொத்த வருஷம் 120 ஆக வகுத்திருத்தல் ஒருவாறு பொருத்தமுடைய தெனினும், 9 தசாநாதர்களுக்கும் வித்தியாசமான வருஷ காலங்களும், இராசிவட்டத்தின் பல பாகைகளிலமைந்தவையும், பேதமான பலன்கள் பொருந்தியவையுமான திரைய நட்சத்திரங்கள் மூன்றுக்கும் ஒரே தசாநாதருமா யமைத்ததற்கும் சாஸ்திரீய முறையான ஆதாரங் காணப்படாமையால், இத்தசாக்கிரமம் இலகுவில் கணித்துக்கொள்ளக் கூடிய பஞ்சபட்சி முதலியவை போன்ற "கால அளவு காட்டி" (Table)யே யன்றி, பூமியின் சுழற்சியால் கிரக பாவ ராசி நட்சத்திரங்களுள் இடைவிடாது நிகழ்ந்துகொண்டிருக்கும் யோகாவயோகங்கள் மேற்படி தசாக்கிரமத்திற்கு மாறுபட்டதால் நிகழாதிருக்கமுடியாதென்றும், ஒவ்வொரு ஜனன சாதகத்தையுங் கொண்டு தனித்தனி கணிப்பதான சக்கர மகாதசை (Primary Direction) யொன்றே, தெளிவாய்க் கண்டுணர்ந்து வருகால பலன்களைத் திட்டமாய்ச் சொல்லவல்ல தென்றும் கூறினார்.

இதிலாராய்ந்து கண்ட பல உதாரணங்களைக் கூர்ந்து நோக்குமிடத்து, சாயனத்தை யனுசரித்து மேலைத் தேசத்தார் ஆராய்ச்சி முறையில் திருத்தியும் புதுக்கியும் கையாளுவதான முறைமை சிறந்ததாய்க் காணப்பட்டாலும் ஆன்றோர் வகுத்த சமயானுஷ்டானம், கிரகப்பிரீதி முகூர்த்தமாதியவையினுபயோகத்திற்காக, முன்கூறியபடி திருந்திய வகையில் பஞ்சாங்கங்களை வெளியிடச் செயவதற்கும், ஜனன ஜாதகம், அண்ட ஜாதகம் ஆதியவையுணர்த்தும் மேலைத் தேச நூல்களை மொழிபெயர்த்துத் தமிழ் நாட்டினரும் உபயோகிக்கும் பொருட்டு, ஆனந்தபோதினிப் பஞ்சாங்கத்திற் காண்பது போன்ற நட்சத்திர ஓரை, நெப்டியூன், யூறனஸ் ஆகியவைகளோடு கூடிய கிரகஸ்புடங்கள் கணித்து வெளியிடச் செய்வதற்கும், வான சாஸ்திர விற்பன்னரான பெரியா ரொருவரைத் தலைவராயும், பஞ்சாங்க கர்த்தாக்களையும் மேலைத் தேச சோதிட நூலுணர்ச்சியில் தேறியவர்களையும் அங்கத்தினராய்க் கொண்டதுமான சோதிட சாஸ்திர மகாசபை யொன்று முன்வருதல் அவசியமாகும்.

சோதிட சாஸ்திரத்தின் அபிவிருத்தியை நோக்கியதான இக்கட்டுரையில், குற்றங்களை நீக்கிக் குணங்களைக் கொண்டு, மேற் சொல்லிய சங்கம் நிறுவுவதாலோ, அன்றேல் இத்தகைய கட்டுரைகள் எழுதுவதாலோ சீர்திருத்தும் வகையில் முன்வருமாறு, "தொன்மை யவாமெனு மெவையும் நன்றாகா இன்று தோன்றி யவாமெனு மெவையுந் தீதாகா" என்னும் உயர்மொழியைச் சிரமேற்கொண் டொழுகும் பெரியார்களை வேண்டுகிறேன்.

---




## "அறிமுகம்"

அறிமுகமானவர்.—"உங்கள் தகப்பனார் சமீபத்தில் காலஞ் சென்றதைக் கேட்டு மிகவும் வருத்தப்பட்டேன்".

மற்றவர்:—"ஐயையோ இப்படி யார் சொன்னது? அவர் சௌக்கியமாயிருக்கிறாரே!"

அறிமுகமானவர்:—"ஓஹோ! உங்கள் தாயார் போலிருக்கிறது!"

மற்றவர்:—"இல்லையே அவளும் சௌக்கியமாகவே இருக்கிறாள்"

அறிமுகமானவர்:—"சரி! சரி!! இப்பொழுது ஞாபகம் வந்தது! உங்கள் மனைவியின் தகப்பனார்......"

மற்றவர்:—"அதுவும் தப்பு! அவளுடைய பெற்றோர் இருவரும் சௌக்கியமாயிருக்கிறார்களே!"

அறிமுகமானவர்:—"ஓ! அப்படியா? நீங்கள் வாடாமங்கலம் வாசுதேவ பிள்ளை தானே!"

வற்றவர்:—இல்லை! நான் நீடாமங்கலம் நீலகண்டம் பிள்ளை!"

அறிமுகமானவர்:—சரிதான்! சரிதான்! யாரோ என்னிடம் அப்படிச் சொல்லிவிட்டார்கள். கொஞ்சம் பொடி யிருந்தால் கொடுங்கள்."

***

## "மேறகோள்"

நண்பன் :—" என்னடா ! மாதம் ரூ. 35-சம்பளம் வாங்கியும் செலவுக்குப் போதவில்லை என்று அழுகிறாய்?"

மற்றவன்:—"எவ்வளவு வாங்கினால் என்ன? "தந்தை தாய்ப்பேன்" என்று சும்மாவா சொல்லி வைத்தார்கள். வீட்டில் அப்பாவும் அம்மாவம் பேன் அரித்தாற்போல் அரித்துப் பணத்தை வாங்கிவிடுகிறார்களடா!





"சுறுசுறுப்பு"

வேலைக்காரன்:-"எஜமான்! எஜமான்! எழுந்திருங்கள்."

ஜமீன்தார்:—"போடா! ஒன்பது மணிக்கு அல்லவோ என்னை எழுப்பச் சொன்னேன்."

வேலைக்காரன்:—"மணி ஒன்பதுக்கு மேலாகிவிட்டது எஜமான்!"

ஜமீன்தார்:-"அப்படியானால் என்னை நன்ருய்த் தட்டி எழுப்பு."

***

"சகாயம்"

நியாயாதிபதி:— "உனக்கு இது ஆரும் தடவையாதலால் இம்முறை கடுமையான தண்டனை விதிக்கப்போகின்றேன்"

குற்றவாளி:-"என்ன எஜமான்? ஏழை மீது இரக்கமில்லையா? வாடிக்கைக்காரருக்குச் சகாயம் பண்ணுவது உலக இயல்பல்லவா?"



***



"கீழ்ப்படிதல்"

தமது தொழிற்சாலையில் நடைபெறும் வேலைகளை மேற்பார்வையிட வந்த முதலாளி புதியவனுகத் தென்பட்ட சிறுவனைப் பார்த்து "உன்னைப் பார்த்தால் புதியவனுகத் தெரிகிறதே! நீ என்று முதல் இங்கே வேலைக்கு அமர்ந்தாய்?"

சிறுவன்:—"நேற்றுமுதல் எஜமானே!"

முதலாளி:—"நீ மேஸ்திரி இட்ட வேலையைச் சரியாகச் செய்துவருகிருயா?"

சிறுவன்:—"தாங்கள் வருவதைப் பார்த்தவுடன், தூக்கத்திலிருந்து தம்மை எழுப்பும்படி மேஸ்திரி சொல்லிவைத்திருந்தார். ஆனல், இப்போது தாங்கள் திடீரென்று வேறு வழியாக வந்துவிட்டீர்கள். நான் என்ன செய்வேன் எஜமான்?"

***

பையன்:—"அம்மா நான் பிறந்தபோது நீ வீட்டில்தானே இருந்தாய்?"

தாய்:—"இல்லை. நான் உன் பாட்டியார் வீட்டிலிருந்தேன்."

பையன்:—"அப்படியா? நான் பிறந்து விட்டேனென்று செய்திகிடைத்ததும் உனக்கு மிகுந்த ஆச்சரியமா யிருந்திருக்குமே."



## "தலைக்குக்கல்"

மீன் பிடிப்பவன்:—"அண்ணா! நீ இந்தச் சமயத்தில் அதிகத் தந்திரமாய் நடந்துகொள்ள வேணும். இல்லாவிட்டால் உன் தலைக்குக் கல் வைத்துவிடுவான்"

நண்பன்:—"அடே! அதை மாத்திரம் என்னிடம் சொல்லாதே! நான் யார் தெரியுமா? என் தலைக்குக் கல் வைக்க எமதருமாராஜனாலும் முடியாது"

***

நோயாளி:—"எனக்குச் செய்யப் போகும் "ஆபரேஷன்" அபாய மில்லாமல் நடக்குமா சார்?"

டாக்டர்:—"அந்தச் சங்கதிதான் ஆனபிறகு தெரிந்துகொள்ள வேண்டி யிருக்கிறது"

***



## "யாருடைய குற்றம்"

வியாபாரி:—"என்ன சார்! வாங்கி ஆறுமாத மானபின் கிளி நன்றாய்ப் பேசவில்லை என்று கொண்டு வந்திருக்கிறீர்கள் இது நியாயமா? ஏன் அது பேசவில்லை என்று விளங்கவில்லையே"

கிளி வாங்கியவர்:—"அ—அ—ந—கொ—கொ—கொ—கொ—கொ—கொன்னுகிறது."

***

ஒருவன்:—"இந்தக் குடை யாருடையது?"

மற்றவன்:—"தம்பியுடையது"

ஒருவன்:—"உனக்கு யாரும் தம்பிகள் இல்லை என்றாயே"

மற்றவன் :—"அதன்மேல் தம்பியுடையது என்று எழுதப்பட்டிருக்கிறது"

***

தந்தை:—"நீ ஊருக்குப் போனவுடனே தெரியப்படுத்து"

மகன்:—"கடிதம் எழுதுகிறேன்"

தந்தை:—"பணம் ஏதாவது தேவையாயிருக்குமோ என்னவோ?"

மகன்:—"அப்போது தந்தி கொடுப்பேன் அல்லவா?"




சீனவுக்குப் பக்கத்திலுள்ள சுரு மீன்கள் மிகுந்த கடலில் ஜோன்கேஜ் என்னும் 19 வயது ஆங்கிலப் பெண் நான்கு மைல் தூரம் நீந்திச் சென்று கரை சேர்ந்தாளாம்.

*   *   *

சாதாரண வெண்காயத்திலிருந்து பல நிறமான சாயங்களைச் செய்யும் முறையை ஒரு நீக்ரோ டாக்டர் கண்டுபிடித்திருக்கிறாராம். மரத் தூளிலிருந்து ஒருவகைப் பளிங்கு போன்ற பலகை செய்யும் விதத்தையும் அவர் கண்டுபிடித்திருக்கிறாராம்.

*   *   *

அமெரிக்காவில் மாணவர்கள் பெரும்பாலும் பரீக்ஷைகளில் தவறிவிடுவதற்குக் காரணம் அவர்கள் கலாசாலைகளில் இருக்கும்போதே காதல் கொண்டுவிடுவதுதானாம்.

*   *   *

உலகிலேயே மிகப் பழமையான வர்த்தகக் கம்பெனி யொன்று ஸ்டாக்ஹோமில் இருக்கிறதாம். இக்கம்பெனி 12-ம் நூற்றாண்டில் தொடங்கப் பட்டதாம். இன்னும் அது நடைபெறுகிறதாம். 700 ஆண்டுகட்கு முந்திய தஸ்தாவேஜுகளும் அங்கே இருக்கின்றனவாம்.

*   *   *

தலைமயிர் வெட்டுவதற்கு இனிமேல் கத்தரிக்கோல் வேண்டியது அவசியமில்லையாம். அதற்கென்று மின்சாரத்தின் உதவியால் ஒரு புதிய இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதாம். கூடிய விரைவில் அது உபயோகத்திற்கு வந்துவிடுமாம்.

*   *   *

பர்லின் நகரில் போலீஸார் நாற்றமெடுக்காத முறையில் பக்குவம் செய்யப்பட்டிருந்த ஒரு பெண்ணின் பிணத்தைக் கண்டுபிடித்தார்கள். அது பத்து மாதகாலமாக ஒரு அறையில் கிடந்துவந்ததாகத் தெரிந்தது. இறந்துபோன பெண்ணின் புருஷன் ஒரு ரஸாயன நிபுணனும். இவன் பைத்தியம்பிடித்தவன் என்று போலீஸாரால் கைது செய்யப்பட்டிருக்கிறானும்.

*   *   *

கிட்டி மாக்ஹேல் என்னும் பதின்மூன்று வயதுடைய ஆங்கிலச் சிறுமி சுமார் 3028 முறை விடாமற் குதித்துக்கொண்டே நின்றாளாம். இதுவரையில் இவ்வளவு முறை குதித்தவர்கள் ஒருவருமில்லையாம்.

*   *   *

லண்டனில் டெம்பல்பார் என்னுமிடத்தில் கோர்ட் ஆரம்பித்து ஐம்பது ஆண்டுகளே ஆகின்றனவாம். அங்கு இதுவரையில் சுமார் 5,50,000 வழக்குகள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. 9000 பேர் அக்கோர்ட்டில் வேலைசெய்து வருகிறார்களாம். அதில் 800 அறைகள் இருக்கின்றனவாம். கட்டடத்தைச் சுத்தம் செய்யமாத்திரம் 100 பேர் இருக்கின்றனராம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## "பிரசண்ட விகடன்" தோற்றம்

வரும் ஏப்ரல் மாதம் முதல் நமது காரியாலயத்திலிருந்து "பிரசண்ட விகடன்" என்னும் பேரால் ஒரு ஹாஸ்ய மாத சஞ்சிகை வெளிவரும் என்ற சந்தோஷச் செய்தியை நமது "ஆனந்தன்" நேயர்கட்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். கதைகள், கட்டுரைகள், படங்கள், அற்புதச் செய்திகள், சமூக-சமய-அரசியல் செய்திகள் எல்லாம் விலாப்புடைக்கச் செய்யும் ஹாஸ்ய மயமாகவே "பிரசண்ட விகடன்" தாங்கி வருவான். "ஆனந்தன்" நேயர்கள் ஒவ்வொருவரும் துன்பம் நீக்கி இன்பம் ஊட்டும் சிரிப்பு நண்பனாகிய பிரசண்ட விகடனை வரவேற்று ஆதரிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம். உற்றார் உறவினர்கட்கும் இந் நற்செய்தியைத் தெரிவித்து எமக்கு மேன் மேலும் ஊக்கங்கொடுக்க வேண்டுகின்றோம். சந்தா முதலிய விவரங்கள் வேறிடத்தில் காணலாம்.

## கல்லூரி மாணவர் கண்ட பலன்

தற்காலக் கல்வி முறையானது பரீக்ஷைத் தேர்ச்சி நோக்கமுடையதாயும், வெறும் சுமையாயும், வாழ்க்கைக்குப் பயனற்றதாயும் இருந்து வருகிறது என்பது எல்லோரும் கண்கூடாகக் கண்டுவரும் உண்மையாகும். தற்காலக் கல்விமுறையின் போக்கு மாணவர்களின் உடல் நலத்தையே பாழாக்கி வருகிறது. வங்காளத்தில் கல்லூரி மாணவர்களில் 2260-பேர்களை டாக்டர்கள் வைத்திய பரீக்ஷை செய்து பார்த்தார்களாம். அவர்களில் பெரும்பான்மையோருக்கு ஏதோ ஒரு வியாதி இருப்பது தெரியவந்ததாம். நான்கில் ஒரு பங்கினர் சக்திக் குறைவுடன் இருந்தனராம். அநேகருக்குத் தோல் வியாதிகள், ஹிருதய நோய்கள், பல் நோய்கள் இருந்தன என்று கண்டுபிடிக்கப்பட்டதாம். இந்நிலைமையே நமது தமிழ்நாட்டுக் கல்லூரி மாணவர்களிடையேயும் இருந்து வருகிறது என்பதை நாம் விரிக்கவும் வேண்டுமோ? ஆதலால் இக்காலக் கல்விமுறை வீண் பொருள் நஷ்டத்திற்கு ஏதுவாயிருப்பதுடன் உடல நலத்திற்கும் பெருந் தீங்கு செய்வதாயிருக்கிறது. மேனாடுகளுங்கூட நமது பழைய குருகுல முறைகளைக் கையாள விரும்பும்போது நமது நாட்டு மக்கள் இன்னும் கண்ணை மூடிக்கொண்டிருப்பது ஏன் என்று கேட்கின்றோம். படாடோபப்பட்ட கல்வியால் நாம் பட்டுவரும் கஷ்ட நஷ்டங்கள் போதும். இப்பொழுது நமக்கு வேண்டியதெல்லாம் எளிய முறையில்—உடல்நலங் கெடாத அறிவுக் கல்வி—வயிற்றுக்குச் சோறிடுங் கல்வியேயாகும்.

## "கிராமங்களைப் பேணுங்கள்"

இக்காலத்தில் கிராம முன்னேற்றத்தைப்பற்றிப் பலர் பேசுகின்றனர். பிரசாரமும் செய்கின்றனர். ஒரு நாட்டின் உயர்வும் தாழ்வும் கிராமாந்தரங்களைப் பொறுத்திருக்கின்றன என்னும் உண்மை நாளுக்குநாள் உறுதியாகிக்கொண்டு வருகிறது. அயர்லந்து நாட்டின் உயிர்த்தலைவரான டிவாலரா "நமது தொழில்களெல்லாம் மக்களைப் பட்டினங்கட்குக் கொண்டுவருவதற்குப் பதிலாக கிராமங்களில் வாழ்கிற மக்களுக்கு விவசாயத்திற்குப் பக்கத் துணையாயிருக்கவேண்டும் இது மிகவும் பிற்போக்கான நோக்கம் என்று

சிலர் குறை கூறுகிருர்கள். சிலர் பெரிய மொத்தமாகச் செருப்புச் செய்யும் பெரிய தொழிற்சாலை துணி செய்யும் பெரிய தொழிற்சாலை இவ்வாறு தனித் தனியாகப் பல தொழிற்சாலைகள் இருக்கவேண்டும் என்று எண்ணுகிருர்கள். மொத்தமாக இவ்விதம் உற்பத்தி செய்யும் முறையைவிட நமது வேலை முறையினுல் நமது மக்களின் வாழ்க்கை நிலை விரைவில் உயரும் என்று நாம் நம்புகின்ருேம். ஆதலால் கிராமங்களைப் பேணுங்கள்'' என்று சொல்லியிருக்கிருர். இவ்வுபதேசம் நமது பட்டதாரிகளின் கவனங்களைக் கவரவேண்டும் என்பதே எமது விருப்பமாகும்.

## பெண்ணின் பெருமை

பெண்மையில் விரும்பத்தக்க மென்மையும், ஆண்மையில் வன்மையும் கலந்திருத்தல் இயற்கையாயிருக்கிறது. பெண்மைக்குரிய தனிப்பெரும் சிறப்பு வேறு; ஆண்மைக்குரிய தனிப் பெரும் சிறப்பு வேறு. ஆனுல் நமது நாட்டில் இக்காலத்தில் பெண்கள் ஆண்கட்கு ஊழியம் செய்யப் பிறந்த அடிமைகளாகக் கருதப்பட்டு இழிவாக நடத்தப்படுகின்றனர். அவர்கட்குக் கல்வி கற்க உரிமை இல்லை, செல்வத்தில் உரிமை இல்லை, மணத்தில் உரிமை இல்லை—ஆண்டவனைத் தொழவும் உரிமை இல்லை. இந்நாளில் இந்நிலையில் ஒரு சிறிது மாறுதல் அடைந்துகொண்டிருந்தாலும் பழைய வாசனையே மேலோங்கி நிற்பது கண்கூடு. நமது நாட்டுச் சாஸ்திரங்களும் பழக்க வழக்கங்களும் பெண்மையைச் சிதைக்க அடிப்படையாய் விளங்குகின்றன. பெண்கட்கு மனவுறுதி இல்லை என்றும், ஆகையால் பிறந்தது முதல் இறக்கும்வரை அவர்கள் சார்புபற்றி அடிமைகளாகவே இருக்கவேண்டும் என்றும் நமது "சாஸ்திரங்கள்'' கூறுகின்றன. சென்றமாதம் புது டெல்லியில் வாலிபக் கிறிஸ்தவப் பெண்கள் சங்கத்தின் ஆண்டுவிழா லேடி வில்லிங்டன் தலைமையில் நடைபெற்றது. அப்பொழுது லெப்டினென்ட் ஜெனரல் ஸர். ஜார்ஜ் மாக்டன் என்பவர் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினுர். அப்போது அவர் பெண்களைப் பற்றி வெளியிட்ட அருங் கருத்துக்களைக் கீழே தருகின்ருேம்.

"எனக்குச் சிறுவர் சிறுமிகள் விஷயத்தில் விசேஷ அநுபவம் உண்டு. எனக்குத் தற்கால முறைகளின் போக்கும் தெரியும். பெண்களின் மனே உறுதியை நான் பாராட்டுகிறேன். பெண்கள் பொறுமைக் களஞ்சியங்கள். நாஸூக்கான தன்மை, சந்ததி விருத்தி—இவற்றின் இயற்கையான கார்டியன்கள் பெண்களே. அவர்கள் தங்களுடைய அழகிய குரலாலும், மேன்மையான தன்மையாலும் ஆடவரின் முரட்டுத் தன்மையையும் தங்களது இஷ்டம் போல் பணியச்செய்து உண்மை இன்பத்தை வாழ்க்கையின் எல்லாத் துறையிலும் அநுபவிக்க முடியும். உலகம் அழகு, பெருந்தன்மையுடன் கூடிய வசீகரம் இவற்றை விழைகின்றது. இவற்றைப் பெற்றுள்ள பெண்கள் தங்கள் தோற்றம்—அழகு குன்றுமல் பார்த்துக்கொள்ளவேண்டும். அவர்கள் தாங்கள் அணியவேண்டிய ஆடைகளைப்பற்றியும் சிந்தனை செய்யவேண்டும்''

"பெண் ஜன்மம் புண் ஜன்மம்''—பெண்கள் வஞ்சகர்கள். பெண்கள் தூமகேதுக்கள். பெண்கட்கு மனவுறுதி இல்லை. பெருமையில்லை அவர்கள் ஆயிரம் மனம் படைத்தவர்கள் என்று எண்ணிக்கொண்டு பெண்கள் உரிமைகட்கு முட்டுக்கட்டை போடுவோர் மேற்காட்டிய ஸர். ஜார்ஜ் மாக்டன் அவர்களின் பொன்மொழிகளைக் கவனிப்பார்களாக. பெண்மணிகள் குடும்பத் தலைவிகளாய்—கிருக லக்ஷ்மிகளாய் விளங்கவேண்டும் என்றே ஸர். ஜார்ஜ்

மாக்டனும் கூறியிருக்கிறார். ஆண்கள் செய்யவேண்டிய வேலைகளை யெல்லாம் பெண்களும் செய்யவேண்டும் என்ற பொருத்தமற்ற சுதந்தர உரிமையை அவர் வேண்டவில்லை. குடும்ப வாழ்க்கை பொருந்தாவிட்டால் கௌரவமான—லோகோபகாரமான உத்தியோகங்களைப் பெண்கள் ஏற்றுக் கொள்ளலாம் என்றே அவர் உபதேசம் செய்திருக்கிறார். பொருந்து கல்வியும் செல்வமும் பெற்று நமது பெண்ணுலகம் புகழுடன் வாழவேண்டும் என்பதே நமது பேரவா வாகும்.

## போர்க் கருவி யொழிப்புப் புரட்டு

உலகச் சமாதானத்தை நிலைநாட்டுவதற்கென்று சர்வதேச சங்கம் நிறுவப்பட்டது. இந்தச் சர்வதேச சங்கம் என்பதை ஒரு சில வல்லரசுகளின் சங்கம் என்றே கூறவேண்டும். இனிமேல் உலகில் யுத்தங்களே நிகழாவண்ணம் அடியோடு ஒழித்துவிட வேண்டும் என்று விளம்பரம் செய்து போர்க் கருவி யொழிப்பு மகாநாடு கூட்டிற்று. ஒன்றும் நடக்கவில்லை. இப்பொழுது சீனு—ஜப்பான் யுத்தம் வெகு மும்மரமாக ஆரம்பமாகி நடந்துகொண்டிருக்கிறது. இதைத் தடை செய்யச் சர்வதேச சங்கத்தால் முடியவில்லை. போர்க் கருவி யொழிப்பு விஷயத்தில் பிரிட்டிஷார் அநுதாபங் காட்டிப் பிரமாதமாகப் பேசினர். ஆனால அடுத்த ஆண்டு ராணுவ நிர்வாகத்திற்காக 3 கோடியே 80 லக்ஷம் பவுன் செலவு செய்யவேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் தீர்மானம் செய்திருக்கிறது. சென்ற ஆண்டைவிட இவ்வாண்டில் 15 லக்ஷம் பவுன் அதிகம் இதனால் போர்க்கருவிகளைக் குறைத்துவிடுவோம் ஒழித்துவிடுவோம் என்பதெல்லாம் வெறும் புரட்டு என்று விளங்கவில்லையா?

## வகுப்புவாத ஒழிப்புச் சங்கம்

எத்தகைய வகுப்புவாதத்தையும் ஒழித்துவிட வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் லாகூர் டாக்டர். ஆலம் சிறந்த முயற்சி செய்து வருகிறார். இதற்கொரு சங்கம் நிறுவச் சென்ற மாதம் தமது இல்லத்தில் ஒரு கூட்டம் கூட்டினார். பற்பல வகுப்புத் தலைவர்களும் அக்கூட்டத்திற்கு வந்திருந்தனர். எவ்வளவு சீக்கிரத்தில் வகுப்புவாதத் தீமையை ஒழிக்கக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் அதை ஒழித்தாக வேண்டும் என்றும், அதற்காக ஒரு சங்கத்தை நிறுவ வேண்டும் என்றும், பொது மக்களின் நன்மையை விருத்தி செய்வதற்காக எல்லா வகுப்பாரும் கலந்துழைக்கும்படியான முறையில் சங்கம் தொண்டாற்றவேண்டும் என்றும், இது ஒரு அகில இந்திய ஸ்தாபனமாக விளங்க வேண்டும் என்றும் டாக்டர் ஆலம் பேசினார். அவருடைய நன்னோக்கத்தைப் பலர் பாராட்டினர். பதினொரு பேர் அடங்கிய கமிட்டி ஒன்று அக்கூட்டத்தில் நியமிக்கப்பட்டது. அக்கமிட்டியார் விரைவில் விதிகளைத் தயாரித்து விடுவார்கள் என்று நம்புகின்றோம். வடநாட்டில் ஹிந்து—முஸ்லிம்—சீக்கிய வகுப்பு வேற்றுமைகள் இருப்பதுபோலவே தென்னாட்டில் பிராமணர்—பிராமணரல்லாதார் வகுப்புப்போர் இருந்துகொண்டு வருவது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். நமது நாட்டில் விடுதலைக்கு முட்டுக்கட்டையா யிருப்பது வகுப்பு வேற்றுமைப்பேய் என்பது அநுபவத்தில் விளங்கிவிட்டது. எனவே அதைத் துரத்தி அடிக்கவேண்டிய பொறுப்பு எல்லா வகுப்பினரையும் சார்ந்து நிற்கிறது. நமது தென்னாட்டுத் தலைவர்களும் டாக்டர் ஆலத்தின் வழியைப் பின்பற்றி வகுப்பு வாதத்தை ஒழிக்க விரைந்து முற்படவேண்டும் என்று விரும்புகின்றோம்.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(640-ம் பக்கத் தொடர்ச்சி.)

இன்றே பல்லாவரத்திற்குப் புறப்பட்டு விட்டேன். அங்கு 'லக்ஷ்மி விலாசம்' என்ற ஹோட்டலில் நேராகப் போய் அங்கேயே ஒரு அறை வாங்கிக்கொண்டு தங்கினேன். அந்த ஹோட்டலின் சொந்தக்காரன் கந்தசாமி யென்பவன் வம்பு பேசுவதற்கு அஞ்சாதவனென வறிந்துகொண்டேனாதலால் அவனுடன் பேசி எனக்குவேண்டிய விஷயத்தைப்பற்றி ஏதாவது தெரிந்து கொள்ளலாம் என் றெண்ணினேன்.

சாவதானமாக அவன் என்னுடன் பேசவந்தபோது நான் அவனைப் பார்த்து "இவ்வூரில் மாசிலாமணி முதலியார் என்பவர் மிக்க தனவந்தர் தானே?" என்று பொழுது போகாதவன் வம்பு பேசுபவனைப்போல் பாவனை செய்துகொண்டு கேட்டேன்.

கந்தசாமி:—ஆம். அதோ நீளமாக வெள்ளை சுவர் தெரியது பாருங்க, அங்கேதான் மாசிலாமணி முதலியார் இருக்கிற இடம். அந்த பங்களாவைப் பார்த்தாலே அவருக்கு என்ன ஆஸ்தி யிருக்குமென்று நாமே தெரிந்து கொள்ளலாம். அப்பப்பா! என்ன திரண்ட ஐசுவரியம்! கோடி கோடியாய்க் குவித்து வைத்திருக்கிறார்; அல்லது செல்வாக்கில்தான் ஏதாவது குறை வுண்டா? திவான் பஹதூர் மாசிலாமணி முதலியார் என்றால் தென்னாடெங்கும் ஒருங்கே தெரியும்.

நான்:—அவருக்கு என்ன வயது இருக்கும்?

கந்தசாமி:—ஏன்? நாற்பது வயதுக்குமேலாகிவிட்டது பாவம்! அவருக்கு உயிர்போல் வாழ்ந்து வந்த மனைவி யிறந்து சில வருஷங்களாகிவிட்டன. உடனே மறு கலியாணம் செய்துகொண்டார். இவருக்கும் அவருக்கும் எப்பொழுதும் சண்டையும் சச்சரவாகவும் இருக்கிறதாகக் கேள்வி!

நான்:—இவருக்குப் பிள்ளை குட்டிகளுண்டோ?

கந்தசாமி:—மூத்த மனைவியால் ஒரு புத்திரனுண்டு. இவருக்கு இப்பொழுது இருபது வயதுக்குமேலாகிவிட்டது. எப்பொழுதும் தமாஷாகவே யிருந்து காலத்தைக் கழிப்பவர்.

நான்:—மாசிலாமணி முதலியார் வீட்டுக்கு அடிக்கடி அவருடைய சிநேகிதர்கள் வருவதுண்டோ?

கந்தசாமி:—ஆகா! உண்டு. எப்பொழுதும் அவர் வீட்டுக்கு ஜனங்கள் வருவதும் போவதுமாகவே யிருப்பார்கள்.

நான்:—அவ்விதம் வந்துபோகும் நண்பர்களில் யாரையாவது சிலரை யுனக்குத் தெரியுமா?......எனக்குத் தெரிந்த ஒரு பாலாமணி யம்மாள் இங்கு வருவதுண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

கந்தசாமி:—ஓ! பாலாமணி யம்மாளை நான் நேரிலேயே பார்த்திருக்கிறேன்.

நான்:—அந்தம்மாளுடன் கோகிலம் என்ற ஒரு பெண் வருவதையும் நீ பார்த்திருக்கலாம் என்றேன்.

கந்தசாமி:—ஓ! அந்தப் பெண்ணைத் தான் மாசிலாமணி முதலியாரின் புத்திரன் கோவிந்தராஜன் கலியாணம் செய்துகொள்ளப் போவதாகக் கேள்விப்பட்டேன்! என்றான்.

இதைக் கேட்டதும் நான் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டேன். இவன் கூறுவது உண்மைதானோ? இவன் எனக்குப் பொய் சொல்லவேண்டிய காரணமில்லை. நான் என்ன செய்யக்கூடும்? பேரிடியைக் கேட்ட அரவம்போல் நான் அரண்டு மயங்கியிருந்தேன்.

சட்டப்படி அவள்—அம்மடமான் கோகிலம் என்னுடையவளே! எனக்குச் சொந்தமானவளே!

காற்றாட மாலை நேரத்தில் வெளியே செல்லவேண்டு மென்று கூறிவிட்டுக் கந்தசாமியிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியே சென்றேன். மாசிலாமணி முதலியாரின் பங்களாவை யொருமுறை சுற்றிப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் கொண்டவனாய் முதல் அவரது தோட்டத்துப் பக்கம் சென்றேன். அங்கு சுற்றிக்கொண்டிருப்பதை யாரும் கண்டு பிடிக்காமலிருக்கும்படிப் புதர்களிலேயே நுழைந்து மறைந்து சென்றேன்.

தோட்டத்தில் ஒரு மேடையில் ஒரு மனிதன் உட்கார்ந்திருக்க, ஒரு இளமங்கை கொஞ்ச தூரத்திலிருந்து அவனை நோக்கிப் போய்க்கொண்டிருப்பதைப் பார்த்தேன். அப்பெண்ணின் அன்ன நடையைப் பார்த்தவுடனேயே அவள் என் மனைவி கோகிலந்தா னென் றறிந்துகொண்டேன். அங்கு உட்கார்ந்திருக்கும் மனிதன்தான் கோவிந்தராஜனோ என்று சந்தேகங்கொண்டேன். இதை நினைக்க என் மனம் பட்டபாட்டைச் சொல்லமுடியாது. கோகிலமும் யௌவனப்பருவமுள்ள அம்மனிதனும் ஏதோ சந்தோஷமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

அவர்கள் பேசுவதைக் கேட்க வேண்டுமென்று என் மனம் அவாக்கொண்டது; ஆனால் அவர்களுக்கருகில் என்னால் போகவும் முடியவில்லை. இப்படி நான் ஏங்கி யிருந்த சமயத்தில் என் பின்னால் கொஞ்ச தூரத்தில் காலடிச் சப்தம் கேட்டது. நான் உடனே பின்பக்கம் திரும்பிப் பார்க்க—என்ன ஆச்சரியம்! எனக்கு விஷச் சுருட்டைக் கொடுத்து என்னை இந்நிலைமைக்கு ஆக்கிய சபாபதி முதலியார் ஒரு பக்கமாக மெதுவாக என்னைப் பார்க்காமல் நடந்துகொண்டிருப்பதைக் கண்டேன். இக்கொடியன் இவ்விடத்திற்கு இரகசியமாகவும் தீய எண்ணத்துடனும் வந்திருக்க வேண்டுமென்றும் என்மனதிற்பட்டது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## ஆங்கீரஸ௵ பங்குனி௴—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855, பசலி 1342, கொல்லமாண்டு 1108, ஹிஜரி 1351, இங்கிலீஷ் 1933௵ மார்ச்௴—ஏப்ரல்௴

| பங்குனி௴ | மார்ச்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ் | திரி48-10 | சித்46-38 | சித்60 | |
| 2 | 15 | புத | சது41-48 | சுவா42-8 | சித்60 | |
| 3 | 16 | வியா | பஞ்35-18 | விசா37-30 | சித்60 | |
| 4 | 17 | வெ | சஷ்29-10 | அனு33-10 | சி33-10ம | |
| 5 | 18 | சனி | சப்23-28 | கே29-23 | சித்60 | |
| 6 | 19 | ஞா | அஷ்18-18 | மூல26-8 | அ26-8சி | |
| 7 | 20 | திங் | நவ13-53 | பூரா23-40 | மர60 | |
| 8 | 21 | செவ் | தச10-23 | உத்22-0 | அ22-0சி | |
| 9 | 22 | புதன் | ஏகா7-38 | திரு21-15 | சி21-15பி | |
| 10 | 23 | வியா | துவா5-50 | அவி21-20 | சி21-20ம | |
| 11 | 24 | வெள் | திர5-5 | சத22-28 | சித்60 | |
| 12 | 25 | சனி | ச●5-18 | பூர24-35 | ம24-35சி | சர்வத்திர அமாவாசை |
| 13 | 26 | ஞா | அமா6-33 | உத்27-43 | அமி60 | சித்திக்கணபதி விரதம் |
| 14 | 27 | திங் | பிர9-3 | ரே31-58 | சித்60 | சைத்திர சுத்தம், யுகாதி பண்டிகை |
| 15 | 28 | செவ் | துதி12-33 | அஸ்37-13 | சித்60 | கரிநாள், |
| 16 | 29 | புத | திரி17-8 | பர43-25 | சி43-25அ | ஆண்டோளன் திரிதிகை |
| 17 | 30 | வியா | சது22-35 | கி✻50-20 | மர60 | கிருத்திகை |
| 18 | 31 | வெள் | பஞ்28-33 | ரோ57-45 | மர57-45சி | சுபகாரியங்கள் நீக்க |
| 19 | 1 | சனி | சஷ்34-45 | மிரு60 | சித்60 | சஷ்டி, கரிநாள் |
| 20 | 2 | ஞா | சப்40-33 | மிரு5-13 | சித்60 | கங்கோற்பத்தி, விவாகம் |
| 21 | 3 | திங் | அஷ்45-30 | திரு11-53 | சி11-53அ | பவான் உற்பத்தி |
| 22 | 4 | செவ் | நவ49-8 | புன17-35 | சித்60 | ஸ்ரீராமநவமி |
| 23 | 5 | புதன் | தச51-3 | பூச21-48 | சித்60 | சர்வ முகூர்த்தம் செய்ய |
| 24 | 6 | வியா | ஏகா50-58 | ஆயி24-10 | சி24-10அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 25 | 7 | வெ | து48-53 | மகம்24-38 | ம24-38சி | வாமன துவாதசி |
| 26 | 8 | சனி | திர44-53 | பூர23-15 | சி23-15மர | அனங்கபூஜா விரதம் |
| 27 | 9 | ஞா | சது39-18 | உத்20-55 | அமி60 | பங்குனி உத்திரம் |
| 28 | 10 | திங் | ○32-43 | அஸ்15-38 | சி15-38பி | பௌர்ணமி, அநும ஜயந்தி |
| 29 | 11 | செவ் | பிர24-55 | சித்10-10 | சித்60 | சைத்திரபகுளம் |
| 30 | 12 | புத | துதி16-40 | சுவா4-3 விசா57-40 | சித்60 | அவமாகம், தானியம் செலவிட, கோடியுடுக்க |
| 1 | 13 | வியா | திரி8-28 | அனு51-38 | சி51-38பி | மேஷரவி நா-8-53-வினுடி ஸ்ரீமுக வருஷப் பிறப்பு |

(Side label beside April dates: 1933௵ ஏப்ரல்௴)

| | | | |
|---|---|---|---|
| ஸூரி புத | | | |
| சுக் ராகு | 8-மீன-சுக் | | |
| சனி | | | செவ் குரு கே |
| | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.